இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப் படுத்தும்—இதர நோய்கள் பாதிக்கவும் இடமளிக்கும்.

# வாடர்பரீஸ் காம்பவுண்ட் அருந்தி ஆரோக்கியமாகவும் சக்தியுடனும் திகழுங்கள்

இருமலும் ஜலதோஷமும் உங்களை பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைப்பதால், இதர நோய்கள் உங்களைப்பாதிக்கக்கூடும். எனவே தவறாது வாடர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிட்டு வாருங்கள். பசியைத் தூண்டி, இழந்த சக்தியை மீட்டு, உடலுக்கு நோய்த்தடுப்புச்சக்தியை அளிக்கும் ஊட்டப்பொருள்கள் அடங்கியது வாடர்பரீஸ் காம்பவுண்ட். அதிலுள்ள க்ரியோஸாட் மற்றும் க்வயாகால் இருமலிலிருந்தும் ஜலதோஷத்திலிருந்தும் நிவாரணம் அளிக்கின்றன.

**வாடர்பரீஸ் காம்பவுண்ட்—மிகவும் நம்பகமான டானிக்**




வார்னர்-ஹிந்துஸ்தான் லிமிடெட்

WH 8075 TM

# இந்தியாவின் ரேடியோக்கள் மற்றும் டிரான்ஸிஸ்டர்கள் தொழிலிலேயே அதிகமாக ஏற்றுமதிசெய்யும் மர்பி அளிக்கும்...



மினி மாஸ்டர் 4
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 220.00*



நம்நாட்டிலும்,
வெளிநாட்டிலும்
டிரான்ஸிஸ்டர்களில்
அதிகமாக விரும்பி
வரவேற்கப்படுவது!



ம்யூஸிஷியன்
மீடியம் வேவ்
ரூ. 125.00*



மினி பாய் 2
2 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 175.00*

முஸாபிர்
3 பாண்ட் ஆல்-வேவ்
ரூ. 283.00*

சில டிரான்ஸிஸ்டர்களே நீங்கள் செலவழிக்கும் பணத்திற்கு சிறந்த பலனை அளிக்கிறது-கஷ்டத்தை குறைப்பது!

இதனாலேயே, இந்நாட்களில் மேலும் மேலும் அதிகமான ஜனங்கள் மர்பியையே விரும்பி வாங்குகிறார்கள். உண்மையாக 60,000த்திற்கு மேற்பட்ட மர்பி-இந்தியா ரேடியோக்களும், அதன் கருவிகளும், சென்ற வருடம் ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளன-மேலும் 70,000த்திற்கு மேற்பட்ட ஆர்டர்கள் கைவசமுள்ளன.

இதை நீங்கள் படிக்கும்போதே, அண்மையில் தானாவில் துவக்கப்பட்ட மர்பியின் தொழிற்சாலையில் மேன் மேலும் தரமான டிரான்ஸிஸ்டர்கள் உற்பத்தியை பெருக்கத் துவங்கி விட்டது.

ஆனால், இதன் தன்மையை மதிப்பிடுவதை உங்களிடமே விட்டு விடுகிறோம். அண்மையிலுள்ள விற்பனையாளர்களிடம் சென்று இதன் ஆகர்ஷண நாத்தை ஒத்திட்டு பாருங்கள். பிறகு உண்மையான தரமான செட்டிலிருந்து கிடைக்கும் பேரானந்தத்தை உணர்வீர்கள்!

* விலை: சுங்க வரி உள்பட - இதர வரிகள் தனி

**மர்பி** இல்லத்தை மகிழ்விக்கிறது!



ஒளிவீசுவோரின் மதிப்பு–

**ஸன்லைட்** தரும் சிறப்பு

ஸன்லைட் சலவையின்

ஒளியே ஒளி. மற்ற சோப்புக்களைவிட

தூய்மையிற் சிறந்தது ஸன்லைட்




லின்டாஸ்–S. 65-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு




# எல்லா பண்டங்களையும் சுதாவில் தயார் செய்து உயர் ரக உணவை அடைய முயலுங்கள்

உங்கள் உணவுக்கு சுதா தனிப்பட்ட மண, ருசியையும் கொடுத்து உங்களுக்கு மேலும் போஷாக்கையும் அளிக்கிறது. சுதா உணவையும் விருந்துபோல் செய்கிறது.

அலுத்துப்போன உணவை உண்டு திருப்தி அடைவதைக் காட்டிலும் பண்டங்களை சுதாவில் தயாரித்து விருந்தைப்போல் சாப்பிடுங்கள்.

உங்கள் சமையலுக்கு சுதா இன்றியமையாத ஒரு சாதனம்.

## சுதா வனஸ்பதி

கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிமிடெட்
ஹைட்ரோஜனேஷன் டிவிஷன்
கோழிக்கோடு - 5 கேரளா




KSO: 49

புது டயரா
அல்லது டிவிஎஸ் ரீட்ரெட் செய்ததா?

செய்வன திருந்தச் செய்வதில்
சிறப்பு வாய்ந்தது டிவிஎஸ். மிகத்
தேர்ச்சிபெற்ற தொழிலாளர்கள்
கண்ணும் கருத்துமாய், நவீன
யந்திரங்களைக் கொண்டு, மிகச்சிறந்த
ரப்பரை உபயோகித்து உங்கள்
பழைய டயர்களைப் புதுப்பிக்கின்றனர்.
விஞ்ஞான முறையில் டிவிஎஸ்
ரீடிரெடிங் செய்யும் டயர்கள் புது
டயர்களைப்போலவே தோற்ற
மளிக்கின்றன. புது டயர்களைப்போல்
உழைக்கின்றன. ஒரு புது டயர்
வாங்கும் விலைக்கு மூன்று பழைய
டயர்களை ரீடிரெடிங் செய்யலாம்.

இந்தியாவிலேயே மிகப்பெரிய
அளவில் ரீடிரெடிங் செய்வது டிவிஎஸ்

சொந்தக்காரர்களுக்கு
மட்டுமே தெரியும்




டிவிஎஸ் உங்கள்
நம்பிக்கைக்கு உரியது

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்
(இது ஒரு டிவிஎஸ் ஸ்தாபனம்)
பங்களூர் - கோயமுத்தூர் - எர்ணகுளம் (கலமசேரி)
மதராஸ் - புதுக்கோட்டை - சேலம் -
செகந்திராபாத் - திருநெல்வேலி - விஜயவாடா

51-5293





# பிள்ளைப் பிராயம்; கற்கத் துடிக்கும் வயது; போர்ஹான்ஸ் உபயோகித்துப் பற்களை சீராகப் பராமரிக்க அவளுக்குக் கற்பிக்கும் காலம்!

அவளுக்கு இந்தச் சிறு வயதில், அறியத் துடிக்கும் இயல்பும், உற்சாகமும் நிரம்பி வழிகின்றன. இப்போது நீங்கள் கற்பிக்கும் எதையும் அவள் என்றும் நினைவில் வைப்பாள். எனவே, முக்கியமான விஷயங்களை அவளுக்குப் போதியுங்கள். அதாவது, போர்ஹான்ஸ் உபயோகித்து பற்களை சீராகப் பராமரிக்கக் கற்பியுங்கள்.

பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹான்ஸ் பற்பசையில் ஈறுகளின் நலனுக்காக ஒரு விசேஷ மருந்து சேர்க்கப் பட்டுள்ளது. அது ஈறு உபாதைகளையும் பற் சிதைவையும் தடுக்க உதவுகிறது. அது உங்களுக்கு மட்டுமின்றி உங்கள் குழந்தைக்கும் மிகவும் ஏற்றது. எனவே, காலையிலும் இரவிலும் தவறாமல் போர்ஹான்ஸ் பற்பசையால் பல் துலக்க உங்கள் குழந்தைக்குக் கற்றுக் கொடுங்கள்.

**போர்ஹான்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.**




இலவசம்: "பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம்*

இந்தச் சிறு புத்தகம் 10 மொழிகளில்† கிடைக்கிறது. இதைப்பெற, தபால் செலவுக்காக 15 பைசா தபால் தலையை "மானேர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1" என்னும் முகவரிக்கு அனுப்பவும்.

பெயர் ______

முகவரி ______

† எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ அதன் கீழ் கோடிடவும். தமிழ், ஆங்கிலம், ஹிந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

**போர்ஹான்ஸ்**
பற்பசை
பல்வைத்தியர்
ஒருவரால்
உருவாக்கப்
பெற்றது

67 F-182 TAM

# ஆரஞ்சு–சுவையுள்ள ஆஸ்டோமால்ட் உங்கள் குழந்தைக்குத் தேவை–அது பசியைத் தூண்டி, ஆரோக்கியமான இரத்தத்தையும், அதிக சக்தியையும் அளிக்கிறது.

ஆரஞ்சின் அருஞ்சுவையுள்ள

**ஆஸ்டோமால்ட்**

**ஆரஞ்சு ரசம் மற்றும் வைட்டமின் பி$_{12}$ கொண்ட ஒரே மால்ட் டானிக். வைட்டமின் பி$_{12}$ பசியைத் தூண்டவும், வளர்ச்சிக்கும் உகந்தது**

ஆஸ்டோமால்டின் இனிய ஆரஞ்சு சுவையைக் குழந்தைகள் மிகவும் விரும்புகிறார்கள். தினத்திற்கு இரண்டே டீஸ்பூன் கொடுத்து, அவர்கள் ஆரோக்கியமாக வளர்வதைப் பாருங்கள்! வைட்டமின் பி$_{12}$ பசியைத் தூண்டுகிறது, சீரண சக்தியைப் பெருக்குகிறது. வைட்டமின் ஏ, மற்றும் டி செறிந்த ஆஸ்டோமால்ட் குழந்தைகளின் கண்களுக்கு நல்லது; நோய் எதிர்ப்புச் சக்தியை வளர்க்கிறது. ஆரோக்கியமான இரத்த வளர்ச்சிக்கு இரும்புச் சத்தும், அதிகமான ஆற்றலுக்கு மாவுச் சத்தும் கூடக் கொண்டது அது. பருவ மகளிர்க்கும் பெரிய பெண்மணிகளுக்கும் இரும்புச் சத்து அதிகம் தேவை. இரும்புச் சத்து, வைட்டமின் பி$_{12}$ செறிந்த ஆஸ்டோமால்ட் பலவீனம், சோர்வு, சோகை வெறுப்பு ஆகியவற்றை முறியடிக்க உதவுகிறது. ஆரோக்கியம் அளிக்கும் ஒரே பாட்டில் ஆஸ்டோமால்ட் ஒரு மாதத்திற்குப் போதுமானது.




இயற்கையான ஆரஞ்சு ரசம் ஆஸ்டோமால்டிற்கு அருஞ்சுவை கூட்டுகிறது.

க்ளாக்ஸோ தயாரிப்பு

**ஆஸ்டோமால்ட்** தமக்கும் தம் குழந்தைகளுக்கும் பெண்மணிகளின் முதல் தேர்வு.

ASP/G/O-1

CNV
PRODUCTIONS

CNV புரொடக்ஷன்ஸ்

# வா ராஜா வா

வண்ணப்படம்

கதை, வசனம், டைரக்ஷன்

**A.P. நாகராஜன்**



சென்னை வெலிங்டன் · பாரத் · மகாலட்சுமி
ராம் மற்றும் தென்னாடெங்கும்......

MARS

# உங்கள் கண்களுக்கு இதமான ஒளி தேவை!

உங்கள் இல்லத்தில், தேவைக்கேற்றபடி சீரான ஒளியைத் தருவதற்கு பலதரப்பட்ட பிலிப்ஸ் லாம்புகள் இருக்கின்றன. உதாரணமாக, பிலிப்ஸ் கினியர் லாம்புகள் மற்றும் ஆர்ஜண்டா லாம்புகள் உள்ளன. கண்கூசாத இதமான ஒளி தேவைப்படும் வேலைகளுக்கு—அதாவது, படிப்பு, வீட்டுவேலை அல்லது தையல் வேலைக்கு—பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகள் சிறந்தவை. வீடுகளில், கண்கூசாத இதமான ஒளி அவசியம் என்பதைக் கருதியே இந்த லாம்புகள் பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. ஒளியை ஒரே சீராகப் பரப்பும் பொருட்டு பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகளில் ஒரு விசேஷ வெள்ளைப் பூச்சு பூசப்பட்டிருக்கிறது. இதனால் கண்கள் கூசாமல் வெளிச்சம் ஒரே சீராகப் பரவும். ஆகவே, சிறியவர் முதல் பெரியவர் வரை, குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் ஏற்ற லாம்புகள் இவை!

பிலிப்ஸ் ஆர்ஜண்டா லாம்புகள் 40, 60 மற்றும் 100 வாட்டுகளில் கிடைக்கின்றன.

கினியர் லாம்புகள், அலங்கார லாம்புகள், டார்ச் மற்றும் டயல் லாம்புகள், TL ப்ளூரஸண்ட் லாம்புகள், மெர்குரி வேபர் லாம்புகள் போன்றவற்றை பிலிப்ஸ் இந்தியாவிலேயே தயாரிக்கிறது. பிலிப்ஸ் தயாரிப்புகளின் பட்டியல் நாளுக்கு நாள் நீண்டு கொண்டே போகிறது. புதிய புதிய மின்சார விளக்குகளை வழங்குவதில் அன்று போலவே இன்றும் முன் நிற்கிறது பிலிப்ஸ். நினைவிருக்கட்டும், உங்களுக்கு எத்தகைய லாம்பு தேவைப்பட்டாலும் பிலிப்ஸிடம் கிடைக்கும்!

**பிலிப்ஸ்**

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்






**பிலிப்ஸ் ஆர்ஜண்டா**

இதமான ஒளி தருவதில் இணையற்றது

HTA-PHL-8381





## திருமதி இந்திரா ஐயர் சொல்லுகிருர்
## 'வீட்டின் பிரகாசத்தை நீண்ட காலத்திற்கு நிலைபெறச் செய்வது நவீன ஆல்கைட்-ப்ளஸ் சேர்ந்த ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பெயிண்டு ஒன்றுதான்.'

'ஒவ்வொரு ஆண்டும் எனது இல்லத்தை வர்ணம் பூசி அழகுபடுத்த எனக்கு கட்டுப்படியாகி வராது. அதனால்தான் அதிக காலம் நீடித்து உழைக்கக்கூடிய, விலைக்குகந்த சிறந்த பெயிண்டுகளையே நான் தேர்ந்தெடுக்க வேண்டியுள்ளது. அதுவே நவீன 'ஆல்கைட்-ப்ளஸ்' சேர்ந்த ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல். பூசப்பட்ட பரப்பில் எஃகு போன்ற உறுதியுடன் சேர்ந்து கொள்வதோடு கண்ணாடிபோன்ற தோற்றத்தையும் அளிக்கிறது. விளையாட்டுத்தனமான எனது மூன்று குழந்தைகள், வீட்டுச் சுவர்களில் கிறுக்கவும், எண்ணற்ற விரல் அடையாளங்களை மையால் பதிக்கவும் செய்பவர்களாதலால் எனக்குத் தேவையானது, எளிதில் கழுவி துடைக்கக்கூடியதும் உறுதியாகவும் இருக்கக்கூடிய ஸிந்தெடிக் எனமல் பெயிண்டுதான். உதிர்ந்து விழாததும், கலர் மாறாததுமான டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பூசப்பட்ட பரப்பை திரும்பத் திரும்ப எத்தனை தடவை வேண்டுமானாலும் கழுவி சுத்தம் செய்ய முடியும்—அதன் மூலம் சிறந்த பிரகாசத்தையும் அன்றுதான் பூசப்பட்டது போன்ற புதிய பொலிவையும் வனப்பையும் பெற முடிகிறது.'

'உங்கள் இல்லங்களுக்கு அழகுக்கு மேல் அழகு சேர்ப்பதோடு பூசும் செலவும் சிக்கனமாகக் கட்டுப்படியாகி வரவேண்டுமானால் ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பெயிண்டையே தேர்ந்தெடுங்கள். நீங்கள் தேர்ந்தெடுக்க மிக அழகான ஏராளமான கலர்கள் உள்ளன. இதனுடைய விலைக்கு ஈடாக கிடைக்கும் வேறெந்த எனமல் பெயிண்டுகளையும் விட அதிக பரப்பிற்கு பூச முடிகிறது. இல்லத்தின் நீடித்த, நிலைபெற்ற பிரகாசமுள்ள தோற்றத்தை ஷாலிமார் டியூரோலாக் ஸிந்தெடிக் எனமல் பூசப்படுவதின் மூலம் பெறுங்கள்.'






# கல்கி

பொருளடக்கம்

சௌமிய, மார்கழி 6 :: 1969, டிசம்பர் 21



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


நீங்கள் காங்கிரஸை அழித்து விட்டீர்கள். நாட்டுப் பொருளா- தாரத்தையும் அழிக்கப் போகிறீர்களா?
"இல்லை! இல்லை! என் நோக்கம் நல்ல நோக்கமே"

காங்கிரஸ் விருட்சம்


பழம் பெரும் மரத்தை வெட்டுகிறார்களே!


மரத்தை வெட்டியதால் சாலை அகலமாகிறது- என் கார் சௌகர்யமாகப் போகும்!



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 ✲ இதழ் 21



# "பிற்போக்காளரும் சீர்திருத்த எதிரிகளும்"

மேலை ஜனநாயகங்களையெல்லாம் 'ஏகாதிபத்தியங்கள்' என்று வர்ணிப்பது சோவியத் வழக்கம். அதேமாதிரி இந்தியாவில் உள்ள ஜனநாயகக் கட்சிகளை ''பிற்போக்காளர்கள்'', ''சீர்திருத்த எதிரிகள்'' என்று குறிப்பிடுவதில் பதவியில் உள்ள காங்கிரஸ் கட்சியினரும் அவர்களுடைய கம்யூனிஸ்ட் தோழர்களும் முனைந்திருக்கிறார்கள். பிரிட்டன் இன்று ஏகாதிபத்திய நாடு அல்ல. இதை அனைவரும் அறிவர். தன் காலனிகளுக்கெல்லாம் அது விடுதலை வழங்கி அவை தம் இஷ்டப்படி ஆட்சி நடத்தும்படி பிரிட்டன் விட்டிருக்கிறது. அமெரிக்கா எப்போதுமே ஏகாதிபத்திய நாடாக இருந்ததில்லை. வார்ஸா ஒப்பந்த நாடுகள்மீது ரஷ்ய ஏகாதிபத்தியம் காட்டி வரும் குரூரத்தையும், அநாகரிகத்தையும் வேறு எந்த ஏகாதிபத்தியத்திலும் காண முடியாது. மேல்நாடுகளை ருஷியா தூற்றுவது போன்றதே, இன்று காங்கிரஸார் ஜனநாயகக் கட்சிகளைத் தூற்றுவதும். சிந்திக்க இயலாத மக்களை ஏமாற்றி, அவர்கள் மனத்தில் துவேஷத்தை விளைவிப்பதற்காக அதிகார பீடத்தில் இருக்கும் காங்கிரஸாரும், கம்யூனிஸ்டுகளும் பொய்க் கோஷங்களை உபயோகிக்கின்றனர்.

சுதந்திரத்தை அநுபவிப்பதில்தான் வாழ்க்கை நிறைவு காண்கிறது: அதன் மூலம்தான் மகிழ்ச்சி ஏற்பட முடியும் என்பது அடிப்படை உண்மை. அந்த உணர்வுக்கு மதிப்புத் தராதவர்கள், சுதந்திரக் கட்சி பிற்போக்கானது என்று கற்பனை செய்து கொள்கிறார்கள். இந்துக்களின் சிந்தனைப் போக்கையும் பண்பாட்டையும் தெளிந்தறியாதவர்கள், மதமே தேவையில்லை என்று கருதி, 'சீர்திருத்த எதிர்ப்புக் கட்சி' என்று ஜன சங்கத்துக்குப் பட்டம் சூட்டுகிறார்கள். நவீன மனப்பான்மையும், முற்போக்குத் தன்மையும் கம்யூனிஸ்டுகளுக்கே உரித்தானவை என்று மேலே நாம் குறிப்பிட்டவர்கள் கருதுகிறார்கள். பொருளீட்டுவதிலோ, ஆன்மிக ரீதியிலோ இந்தியா கடைத்தேறுவதற்குக் கம்யூனிஸ்டுகளால் பயனில்லை; காங்கிரஸ்காரர் உருவாக்கும் கம்யூனிஸமும் பயன்படாது. கம்யூனிஸம் உதவாக்கரையானது என்பது நிரூபணமாகிவிட்ட விஷயம். இந்தியாவில் நமக்குத் தேவைப்படுவது கடுமையான உழைப்பும், தீவிரமான உற்பத்திப் பெருக்கமும்தான். இவை கம்யூனிஸத்தின் மூலம் கிடைக்க மாட்டா. சர்வாதிகாரியின் கட்டளைக்குப் பயப்படாமல் சுயமாக உழைப்பதை ஊக்குகின்ற முறையின் மூலம்தான் இவை கைகூடும். மனிதர்களுக்கு இயற்கையாக ஊக்கம் தரக்கூடிய வாய்ப்புக்களின் அடிப்படையில் பொருளாதாரக் கொள்கை அமைய வேண்டும் என்று சுதந்திரக் கட்சியும், ஜனசங்கமும் விரும்புகின்றன. சர்வாதிகார சோஷலிசத்துக்கு அவசியமாயிருப்பது அடிமைப் புத்தி. ஆட்சியிலுள்ள காங்கிரஸின் கொள்கை சர்வாதிகாரத் தன்மையுள்ள சோஷலிசம்தான் என்று எதிர்த் தரப்பில் உள்ள காங்கிரஸே கண்டிக்கிறது.

ஸ்ரீ எம். ஆர். பாய், ''முதல் தேவை சுதந்திரம்'' என்ற நூலில் சில பயனுள்ள சிந்தனைகளை வெளியிட்டிருக்கிறார். அவர் கூறுவதன் கருத்து இது தான்: இந்திய அரசியலில் இப்போது ஒரு மாறுதல் ஏற்பட்டு வருகிறது. பல கட்சிகள் சேர்ந்த கூட்டுச் சர்க்கார்கள் அமைகின்ற போக்கு வலுத்து வருகிறது. முதலில் கொஞ்ச காலம் குழப்பம் இருக்கும். பிறகு அடங்கிவிடும். சுதந்திரத்தை அதிகச் சிரமமின்றிப் பெற்ற மக்கள் இந்தக் குழப்ப நிலைக்குத் தலை வணங்கித்தான் ஆகவேண்டும். இதனால் ஒரு நன்மையும் உண்டு. திமிர் பிடித்த பல ராஜீயவாதிகள் முதல் தடவையாக அடக்கம் என்றால் என்ன என்பதை அறிந்து கொள்வார்கள்.

'சர்க்கார் இரண்டு பெரிய ஏகபோகங்களைச் சிருஷ்டித்திருக்கிறது. அவை பொது நலனுக்கெதிராக வேலை செய்து வருகின்றன. ஒன்று பண சப்ளை மீது சர்க்காருக்கு உள்ள ஏகபோகம். இரண்டாவது ஏகபோகம், அதிகாரத்துக்கு

அரசாங்கமே உறைவிடமாக இருந்து வருவது' என்கிறார் ஸ்ரீ பாய். பெர்மிட் — லைசென்ஸ் ஏகபோகத்தையும் மூன்றாவதாக அவர் சேர்த்திருக்கலாம். பண சப்ளையின் ஏகபோகம் காரணமாக விலைவாசிகள் பெரிதும் உயர்ந்துள்ளன. சமூக நலனுக்கு எதிரிடையான வகையில் வருமானங்களை ஒரு சாரார் ஈட்ட முடிந்திருக்கிறது. ஊழல் மலிந்து, நடுத்தர வகுப்புகள் வறுமையில் ஆழ்ந்துவிட்டன. ஒரே கட்சி அரசியல் துறையில் ஆதிக்கம் செலுத்தி வந்த நிலைமை இன்று தகர்ந்து விட்டது. பொருளாதாரத் துறையிலும் சரி, ராஜீயத்திலும் சரி, ஏகபோகங்கள் குலைவது எப்போதுமே வரவேற்புக்குரிய விஷயம்.

பெர்மிட்—லைசென்ஸ் ஆட்சியைச் சுதந்திரக் கட்சி எப்பொழுதுமே எதிர்த்து வந்திருக்கிறது. இந்த ஆட்சி முறை சர்க்காரில் உள்ள ராஜீயவாதிகளுக்கும், பெரிய அதிகாரிகளுக்கும் மிதமிஞ்சிய அதிகாரத்தைத் தருகிறது. தமக்கு விருப்பமானவர்களுக்கு ஏகபோக வசதிகளை அமைத்துத் தர உதவுகிறது. பெர்மிட் — லைசென்ஸ் — கோட்டா முதலியவை இருந்து வரும் வரையில், அவற்றின் நிர்வாகம் கட்சிச் சார்பில்லாத ஒரு தகுதி வாய்ந்த அமைப்பினிடம் விட்டு வைக்கப்பட வேண்டும் என்பது எப்பொழுதுமே சுதந்திரக் கட்சியின் கருத்து. அந்த அமைப்பினர் மந்திரிகளுக்கு அடங்கி நடப்பவர்களாக இருக்கக் கூடாது. இம்மாதிரி கோருவது பிற்போக்குக் கொள்கையா? பெர்மிட் — லைசென்ஸ் முறைப்படி பதவியில் உள்ள தலைவர்கள் தமக்கு வேண்டிய சிலரைப் பொறுக்கி எடுத்து ஏகபோக வசதிகளை அவர்களுக்கு அளித்துக் கட்சிக்கு நிதி திரட்டுகிறார்கள். நவீன மனப்பான்மை என்றோ முற்போக்குத் தன்மை உடையது என்றோ இதைச் சொல்ல முடியுமா?

மதங்கள் அனைத்தையும் மரியாதையுடன் நடத்த வேண்டும். இவ் விஷயத்தில் ஜனசங்கத்தின் மனப்பான்மையில் ஏதாவது தவறு காணப்படின், நேசப் பான்மையில் பேசிச் சரி செய்வதற்கு முயல வேண்டும். சீர்திருத்த எதிரிகள் என்று பட்டம் கட்டி அதை விலக்கி வைப்பதற்கு இது காரணமாகிவிடக் கூடாது. இந்திய மக்களில் மிகப் பெரும்பாலோர் இந்துக்கள். அவர்கள் சீர்திருத்த எதிரிகள் அல்லர். பிற எல்லா மதத்தினர் விஷயத்திலும் சகிப்புத்தன்மையும், இங்கிதமும் நிறைந்த நாகரிகச் சமயம் இந்து மதம். மதமில்லாமல் காலம் தள்ள முடியும் என்று நினைப்பது மதியீனம். காமம், பேராசை, கோபம், துவேஷம் ஆகியவற்றைத்தான் அந்நிலை வளர்க்கும். இவற்றிலிருந்து மனத்தை இழுத்துப் பக்குவப்படுத்தும் சக்தி இல்லாது போகும். சமயத்தின் இடத்தைச் சர்க்காரால் நிரப்ப முடியாது.

உலக மக்களில் ஐந்தில் ஒரு பங்கினர் நம் நாட்டில் வசிக்கின்றனர். உண்மையான மக்கள் ஆட்சியே அவர்களது கோரிக்கை. மதம் இதற்குத் துணை புரிகின்றது. குற்றவாளிகளை அரசு தண்டிக்கலாம். ஆனால் மனிதனை உயர்த்தும் உருப்படியான பணியைச் செய்ய வல்லது மதம்தான். இந்து மதம் சீர்திருத்த எதிர்ப்புத் தன்மை உடையது அல்ல. செல்வப் பெருக்கிலும் நவீனத் தொழிற் துறைச் சாதனைகளிலும் முன்னேற்றமடைந்துள்ள மேலைநாடுகள் உண்மையான மகிழ்ச்சியின் ரகசியத்தைத் தேடி அலைகின்றன. இந்து மதத்தில் அது இருப்பதாக அவை கண்டு பிடித்து வருகின்றன. அமெரிக்காவிலும், பிரிட்டனிலும் நல்ல பண்பட்ட மனிதர்கள், மகிழ்ச்சியைப் பெறுவதற்கான இந்து வழி முறைகளில் ஆர்வம் காட்டி வருகின்றனர். எனவே இந்து மதப் பற்றானது சீர்திருத்தத்துக்கு விரோதம் என்று கருதுவது மடமையீனம்.

("ஸ்வராஜ்யா"வில் ராஜாஜி எழுதியது)

# இசை விழாத் தலைவர்கள்

இவ்வருடம் மியூஸிக் அகாடெமிக்குத் தலைமை தாங்குபவர் பழம்பெரும் வித்வானாகிய மதுரை ஸ்ரீ ஸ்ரீரங்கம் அய்யங்கார் அவர்கள். அவர் சங்கீத சிம்மமாக விளங்கிய நாமக்கல் நரசிம்ம அய்யங்கார் அவர்களின் சீடர். இன்றும் தமது குருவுக்கு அவர் சிறப்பான முறையில் நினைவு நாள் விழா நடத்தி வருகிறார். ஸ்ரீரங்கம் அய்யங்காரும் அவரது சகோதரர் ஸ்ரீநிவாச அய்யங்காரும் சேர்ந்து இசைக் கச்சேரிகள் பல செய்துள்ளனர். பிராசீனமானதொரு சங்கீத சம்பிரதாயத்தின் வழி வந்துள்ள இவருக்கு 'ஸங்கீத கலாநிதி' விருதும் அளிக்கப்படுவது மிகவும் பொருத்தமே.



இவ்வருடம் தமிழிசை விழாவுக்குத் தலைவராக இருந்து இசைப் பேரறிஞர் என்ற பட்டத்தைப் பெறுபவர் சங்கீத கலாநிதி ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யரவர்களாவார். அய்யரவர்களின் அருமை பெருமைகளை நாம் எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. குறிப்பாகத் தமிழிசைக்கு அவர் இன்று தலைமை தாங்குகையில் எத்துணையோ ஆண்டுகளுக்கு முன் பிருந்தே பாரதியாரின் தேசிய கீதங்களைப் பாடியும், பிறகு பாபநாசம் சிவன் முதலிய பெரியார்களின் பாடல்களைப் பிரசாரம் செய்தும், திருவெம்பாவைக்கு மெட்டமைத்தும் பரப்பியும் அவர் ஆற்றியுள்ள தொண்டினை நன்றியுடன் எண்ணுகிறோம். அவர் தமிழிசை விழாவுக்குத் தலைமை தாங்குவது விழாவுக்கே கௌரவம்.



விருது பெறும் வித்வான்கள் இருவருக்கும் நமது வாழ்த்துக்களையும் வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

வாழ்த்தும் பிரார்த்தனையும் தெரிவித்துப் பல நண்பர்களிடமிருந்து எனக்குக் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. அது குறித்து மிகுந்த நன்றி உணர்வுடன் இதை எழுதுகிறேன்.

91 ஆண்டுகளைப் பூர்த்தி செய்துவிட்டேன். ஏராளமான அன்பர்களின் அந்தரங்கமான பிரார்த்தனை அளிக்கும் ஆசி பலத்தால் இனி எனக்கு வழங்கப்படவிருக்கும் ஆண்டுகள் பொருள் பொதிந்தனவாக இருக்கும் என்றும், என் தேக பலமும் மனோ பலமும் அதிகம் பாதிக்கப்படாமல் இருக்கும் என்றும் நம்புகிறேன்.

இளம் வயதினரின் அச்சமற்ற, ஆழ்ந்த சேவையே நாட்டுக்கு முக்கியமாகத் தேவைப்படுகிறது. இளம் வயதினருக்காக பகவான் அருளைக் கோரி மனப்பூர்வமாகப் பிரார்த்திக்கிறேன்.

வாழ்த்து அனுப்பியவர்களுக்குத் தனித்தனியாகப் பதில் எழுத விரும்பியபோதிலும் அவ்வாறு செய்ய எனக்கு இயலாததற்கு வருந்துகிறேன்.

★

''ராஜாஜிக்கு என் மனமார்ந்த பிறந்த நாள் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறேன். அவர் தம் இலட்சியங்களை உண்மையாகக் கடைப்பிடிப்பவர். இலட்சியங்களுக்காகத் தியாகம் செய்யத் தயங்காதவர்'' என்று திரு ஈ. வெ. ராமசாமி நாயகர் கூறினார்.

தாம் காங்கிரஸில் இருந்தபோது ராஜாஜியுடன் கழித்த 'மிகவும் மகிழ்ச்சிகரமான நாட்களை' நினைவுகூர்ந்து தி. க. தலைவர் கூறியதாவது: ''நாங்கள் சேர்ந்திருந்த போது நான் அவரது சீடனைப் போலவே நடந்து கொண்டேன். இருப்பினும் அவர் என்னைத் தமது தலைவரைப் போல் நடத்தினார். அவர் எனக்கு மிக கௌரவமான ஸ்தானம் தந்த போதிலும் நான் அவரது உதவியாளனைப் போலவே நடந்து கொண்டேன்.

''பிற்பாடு நாங்கள் அரசியலில் விலகினோம். எங்கள் கொள்கைகள் ஒன்றுக்கொன்று மாறுபட்டன. எனினும் தனிப்பட்ட முறையில் எங்களிடம் பேதமில்லை. எங்களது மகத்தான நட்பை இருவரும் போற்றி வருகிறோம்.''

இது டிசம்பர் 8ந் தேதி திருச்சியில் திரு ஈ. வெ. ராமசாமி நாயகர் பேசியது பற்றி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' செய்தி. பெரியார் என்ன சொன்னாலும் சரி, என்ன செய்தாலும் சரி அவரிடம் எனக்குள்ள அன்பிலிருந்து என்னால் விடுபட முடியாது. எனக்குப் பலர் வாழ்த்து அனுப்பியிருந்த போதிலும், பெரியார் கூறியதைப் போல் வேறெதுவும் கவனத்தைக் கவர்ந்து மனத்தைத் தொட முடியாது என எண்ணுகிறேன்.

★

புதிய காங்கிரஸின் தலைமைப் பீடத்துக்கு ஸ்ரீ ஜகஜ்ஜீவன்ராம் அவர்களை நியமித்திருப்பது ஹரிஜன சமுதாயத்துக்குச் செய்த கௌரவமாகப் பொதுவில் கருதப்படுகிறது. இப்படிக் கருதுவதில் குற்றமில்லை. ஆயினும் தமது ஆற்றலாலும், தேசிய சேவையாலும் டாக்டர் அம்பேத்கார் பெற்ற கௌரவத்தைவிடப் பெரிய கௌரவம் ஏதும் தேவை இல்லை. பிரதமரின் சேனைக்கு அதிபதியாக ஸ்ரீ ஜகஜ்ஜீவன் ராம் காங்கிரஸ் சண்டையில் இறங்கியிருப்பது ஹரிஜன ஐக்கியப்பாட்டுக்கு நன்மை உண்டாக்குவதைவிட அதிகமாகத் தீமையே உண்டாக்கும் என அஞ்சுகிறேன். என் அச்சம் தவறுகுமாக!

★

ஏற்றத்தாழ்வுகள் நீடித்தால் கிராமங்களில் எரிமலை வெடிப்பது போல் புரட்சி நடக்கும் என்று தாம் கவலைப்படுவதாகக் கூறுகிறார் ஸ்ரீ சவான். இது மிகவும் விஷமத்தனமானது எனக் கருதுகிறேன். இவ்வாறு அவர் கூறுவது, குறிப்பிட்டதொரு கோஷ்டியானது குறுகிய அரசியல் லாபம் சம்பாதிப்பதற்காகக் கிராம மக்களை ஒழுங்கீனத்தில் நேரடியாகத் தூண்டி விடுவதற்கு ஒப்பாகும். இது உடனடியாக நாசவேலைக்காரர்களுக்கு ஊக்கமளிக்கும். கம்யூனிஸ்ட் கட்சிகள் எவ்வளவு பிரிந்திருந்தாலும், உள்துறை மந்திரியின் குறிப்பைப் பயன்படுத்திக் கொள்வதில் அவர்கள் அனைவரும் போட்டியிடுவர்.

## மனுபென் மறைவு



மகாத்மா காந்தியின் பேத்தி முறையாக வேண்டிய குமாரி மனுபென் காந்தியின் அகால மரணச் செய்தி கேட்டு வருந்துகிறோம். 'வெள்ளையனே வெளியேறு' இயக்கத்துக்குப் பிறகு அண்ணல் ஆகாகான் அரண்மனையில் சிறை வைக்கப்பட்டிருந்து, அவர் சுடப்பட்டு 'ஹே ராம்' என்று அலறி விழுந்த கடைசி நொடிவரை அவருடன் இருந்து கண்ணும் கருத்துமாகப் பணிவிடை புரிந்தவர் குமாரி மனுபென். நவகாளியில் துவேஷ வெறி தாண்டவமாடியபோது அடிகள் அங்கு மேற்கொண்ட அன்பு யாத்திரையின்போது அவரைவிட்டு நீங்காமல் தொண்டு புரிந்தவர் மனுபென்.

அண்ணலின் நூற்றாண்டை ஒட்டி ஏற்பாடு செய்யப்பட்ட 'காந்தி தர்சன' ரயில் காட்சியில் முக்கியமான பங்கு ஏற்று, சமீபத்தில் அந்த ரயில் தமிழகத்துக்கு வந்தபோது உடன் வந்திருந்தார் குமாரி மனு. அவரது மறைவில் உண்மையான காந்தியவாதிகளில் ஒருவரை இழந்து விட்டோம்.




# சிறந்த குடும்பக்கலையின் தொடக்கம் ப்ரெஸ்டீஜ்

**Prestige**

**முற்றிலும் அபாயமற்றது:** அதிகபட்ச பாதுகாப்பு சாதனங்கள் உள்ளன.

**தாராளமான இடவசதி:** உங்கள் பாத்திரங்களுக்கோ, ஸ்டீம்-இட்டிறகேர்.

**சர்விஸ்:** இந்தியா முழுவதும், விற்பனைக்குபின் சர்விஸ்.

*எந்தக் குடும்பத்திற்கும் ஏற்றதொரு சரியான சைஸ் இருக்கிறது.*

நேரத்தை மிச்சப்படுத்துகிறது
எரிபொருளை மிச்சப்படுத்துகிறது




**உங்களுக்கு பிரமாதமான பரிசுகள்**

ப்ரெஸ்டீஜ் ப்ரெஷர் குக்கர் ஒன்று வாங்கி பரிசு ஒன்று வெல்லுங்கள். இன்றே உங்கள் ப்ரெஸ்டீஜ் வியாபாரியிடமிருந்து விவரங்களைப் பெறுங்கள்.

தயாரிப்பாளர்கள்:
டிடி. (ப்ரைவேட்) லிமிடெட்
பெங்களூர் - 16

*தென்பிராந்திய விநியோகஸ்தர்கள்:*
M/s. முகமத் இப்ராஹிம் & கோ., பிரைவேட் லிமிடெட்
7/8, மவுண்ட் ரோடு, சென்னை - 2



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

பதின்மூன்றும் அத்தியாயம்

## விஷ பாணம்

அந்த இடத்தில், அந்த நேரத்தில், தேவராளனைப் பார்த்ததும், வந்தியத்தேவனுடைய உள்ளம் சிறிது துணுக்குற்றது. கடம்பூர் அரண்மனையில் தேவராளன் வெறியாட்டம் ஆடியதும் அப்போது அவன் கூறிய மொழிகளும் நினைவு வந்தன. நடுக் கடலில் சுழற்காற்று குமுறிக் கொண்டிருந்த வேளையில் ரவிதாஸனும் தேவராளனும் சொன்ன செய்திகளும் ஞாபகத்துக்கு வந்தன. அவற்றில் எவ்வளவு உண்மை, எவ்வளவு கற்பனை என்று கண்டுபிடிப்பது கடினம். ஆனாலும் அவர்கள் ஏதோ ஒரு மர்ம பயங்கரமான சதிச் செயலில் ஈடுபட்டவர்கள் என்பது நிச்சயம். அவர்களில் ஒருவனிடம் இச்சமயம், அதுவும் இந்த நிர்மானுஷ்யமான இடத்தில் அகப்பட்டுக் கொண்டோமே என்று நினைத்தான். அவனிடமிருந்து தப்பிக் குதிரையை வேகமாகத் தட்டி விட்டுக் கொண்டு போய் விடலாமா என்று ஒரு கணம் எண்ணினான். அந்த எண்ணத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான். தூரத்தில் தீயின் வெளிச்சம் தெரிந்தது. அது சுடுகாடாய்த்தான் இருக்க வேண்டும். ஏதோ ஒரு மண்ணுடல் தீக்கிரையாகிக் கொண்டிருக்கிறது. அந்த மண்ணுடலில் உயிர் இருந்த காலத்தில் எத்தனை எத்தனை ஆசாபாசங்களால் அது அலைப்புண்டிருக்கும்? எத்தனை இன்ப துன்பங்களை அது அநுபவித்திருக்கும்! — அரை நாழிகை நேரத்தில் மிச்சம் இருக்கப் போவது ஒரு பிடி சாம்பல்தான்! உலகில் பிறந்தவர்கள் எல்லாரும் ஒரு நாள் அடைய வேண்டிய கதி அதுவேதான். மன்னாதி மன்னர்களும் சரி, ஏழைப் பிச்சைக்காரனும் சரி, ஒரு நாள் அக்கினிக்கு இரையாகிப் பிடி சாம்பராகப் போக வேண்டியவர்களே!

திகில் வந்தது போலவே திடீரென்று விட்டுப் போய் விட்டது. இந்த வேஷ

வஞ்சகக்காரனுக்குப் பயந்து எதற்கு ஓடவேண்டும்? ஏதோ இவன் சொல்லு வதற்குத்தான் வந்திருக்கிறான். அதைக் கேட்டு வைக்கலாமே? ஒருவேளை, கொல் லன் உலைக்களத்தில் தான் நுழைந்த போது அங்கிருந்து பின்பக்கம் சென்று மறைந்து கொண்டவன் இவன்தான் போலும்! அந்த அதிசயமான வாள்கூட இவனுடையதாக இருக்கலாம். அதன் கைப் பிடியின் அருகில் மீனின் சித்திரம் இருந்ததல்லவா? இவனுடன் கொஞ் சம் பேச்சுக் கொடுத்தால் புதிய செய்தி ஏதேனும் தெரிய வரக்கூடும்.

ஆகையால் குதிரையை மெதுவாகவே செலுத்தினான் வல்லவரையன். முதன் முதலில் புதிது புதிதாக லாடம் அடிக் கப் பெற்ற அந்தக் குதிரையும் நடப்ப தற்குக் கொஞ்சம் கஷ்டப்பட்டதாகத் தோன்றியது. அதை விரட்டியடிக்க மனம் வரவில்லை.

''இங்கே எப்படி, அப்பா, திடுதிப் பென்று வந்து முளைத்தாய்?'' என்று கேட்டான் வல்லவரையன்.

''நான் அல்லவா அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும்? உன்னை நடுக் கடலில் கப்பல் பாய் மரத்தோடு கட்டிவிட்டு வந்தோமே, எப்படி நீ தப்பி வந் தாய்?'' என்றான் தேவராளன்.

''உனக்கு மட்டுந்தான் மந்திரம் தெரியும் என்று நினைத்தாயோ? எனக்கும் கொஞ்சம் தெரியும்!''

''மந்திரத்தில் உனக்கு நம்பிக்கை ஏற்பட்டது பற்றி எனக்கு மகிழ்ச்சி. என்னுடைய மந்திர சக்தியினால் நீ இங்கே தனியாகப் போய்க் கொண் டிருப்பாய் என்று நானும் அறிந்து கொண்டேன். அதனால்தான் நான் முன்னால் வந்து காத்திருந்தேன்.''

''ஏன் காத்திருந்தாய்? என்னிடம் உனக்கு என்ன காரியம்?''



''நீயே யோசித்துப் பார்! அல்லது மந்திர சக்தியினுல் கண்டுபிடி!''

''உங்களுடைய இரகசியங்களை நடுக் கடலில் என்னிடம் நீங்கள் சொல்லி யிருக்கிறீர்கள். அவற்றில் எவ்வளவு உண்மை, எவ்வளவு கற்பனை என்பது எனக்குத் தெரியாது. ஆனாலும் அந்த இரகசியங்களை நான் மறந்துவிடத் தீர்மானித்து விட்டேன். யாரிடமும் சொல்லப் போவதில்லை....''

''அதைப் பற்றி நானும் கவலைப்பட வில்லை. எப்போது நீ அந்த இரகசியங் களை யாரிடமாவது சொல்லலாம் என்று நினைக்கிருயோ, அப்போது உன் நாக்கு துண்டிக்கப்படும். நீ ஊமையாவாய்!''

**வ**ந்தியத்தேவனுக்கு உடல் சிலிர்த் தது. தஞ்சையிலும் இலங்கையிலும் அவன் சந்தித்த ஊமைப் பெண்களைப் பற்றிய நினைவு வந்தது. சற்று நேரம் சும்மா நடந்தான். இந்தப் பாவி எதற் காக நம்மைத் தொடர்ந்து வருகிருன்? இவனிடமிருந்து தப்பிச் செல்லுவதற்கு என்ன வழி? கோடிக்கரையிலிருந்தது போல் இங்கேயும் சேற்றுப் பள்ளம் இருந்தால் எவ்வளவு உபயோகமா யிருந்திருக்கும்? அல்லது ஆற்றில் பிடித் துத் தள்ளிவிட்டுப் போகலாமா? அதில் பயனில்லை. ஆற்றில் தண்ணீர் அதிகம் கிடையாது. வேறு வழி ஒன்றும் இல்லா விட்டால் இருக்கவே இருக்கிறது, உடை வாள். அதை எடுக்க வேண்டியதுதான்.

''தம்பி! நீ என்ன நினைக்கிருய் என்பது எனக்குத் தெரியும். ஆனல் அது கைகூடாது. வீண் முயற்சியில் தலையிடாதே!''

வந்தியத் தேவன் பேச்சை மாற்ற விரும்பினன். அவனிடமிருந்து தப்புவ தற்கு வழி யோசிக்கச் சிறிது சாவகாசம்



வேண்டும். அதுவரை ஏதேனும் பேச்சுக் கொடுத்து வர வேண்டும்.

''உன் கூட்டாளி ரவிதாஸன் எங்கே?''

தேவராளன் ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்து விட்டு, ''அது உனக்கல்லவா தெரிய வேண்டும்? ரவிதாஸன் எங்கே?'' என்று கேட்டான்.

வந்தியத்தேவன் திடுக்கிட்டான். ரவிதாஸனைப் பற்றிய பேச்சைத் தான் எடுத்திருக்கக் கூடாது; எடுத்தது தவறு. ரவிதாஸனை இவன் பார்த்துப் பேசி விட்டு நம்மை ஆழம் பார்க்கிறானா? அல்லது....

''என்ன, தம்பி, சும்மா இருக்கிறாய்? ரவிதாஸன் எங்கே யென்று சொல்ல மாட்டாயா? போனால் போகட்டும்! அந்த ஓடக்காரப் பெண், பூங்குழலி எங்கே? அதையாவது சொல்.''

வந்தியத்தேவன் பாம்பை மிதித்தவன் போல் பதறினான். மேலே பேசுவதற்கே அவனுக்குத் தயக்கமா யிருந்தது.

''அவளைப் பற்றியும் நீ ஒன்றும் சொல்ல மாட்டாயாக்கும். போனால் போகட்டும். அவளை நீ காப்பாற்ற நினைப்பதற்குத் தக்க காரணம் இருக்கலாம், தம்பி! சற்று முன்னால் ஒரு காதல் பாட்டுப் பாடினாயே? அவளை நினைத்துத்தான் பாடினாயா?''

''இல்லை; சத்தியமாய் இல்லை!'' என்று வல்லவரையன் பரபரப்போடு கூறினான்.

''ஏன் உனக்கு இவ்வளவு பரபரப்பு? ஏன் இவ்வளவு ஆத்திரம்?''

''சரி, சரி! அதைப் பற்றி யெல்லாம் பேசிக் கொண்டிருக்க இப்போது அவகாசம் இல்லை. ஏன் என் குதிரையின் முகக் கயிற்றைப் பிடித்துக் கொண்டிருக்கிறாய்? விட்டுவிடு! நான் போகிறேன். அவசரக் காரியம் இருக்கிறது.''

''நான் வந்த காரியத்தை நீ இன்னும் கேட்க வில்லையே?''

''சொன்னால்தானே கேட்கலாம்?''

''இந்த முல்லையாற்றங் கரைக்கு ஓர் அதிசய சக்தி உண்டு. இங்கே யார் எதை விரும்புகிறார்களோ, அது உடனே அவர்களுக்குச் சித்திக்கும்.''

''நான் ஒன்றும் விரும்பவில்லையே?''

''அது பொய்! நீ யாரை நினைத்துக் கொண்டு உன் காதல் பாட்டைப் பாடினாயோ அவள் உன்னைப் பார்க்க விரும்புகிறாள். நீ இஷ்டப்பட்டால் பார்க்கலாம்.''

''எப்போது?''

''இன்றிரவே பார்க்கலாம்.''

''இது என்ன கதை?''

''கதை அல்ல, தம்பி! அதோ பார்!'' என்று தேவராளன் சுட்டிக் காட்டினான்.

அவர்கள் சென்ற வழியில் சற்றுத் தூரத்தில் ஏதோ ஒரு பொருள் மங்கலாகத் தெரிந்தது. வந்தியத் தேவன் உற்றுப் பார்த்தான். அது ஒரு பல்லக்கு — மூடு பல்லக்கு என்று அறிந்தான்.

ஆகா! இந்தப் பல்லக்கை எங்கே பார்த்திருக்கிறோம்? ஏன்? பழுவூர் இளைய ராணியின் பல்லக்கு அல்லவா அது? ஒரு வேளை அதற்குள்ளே நந்தினி இருக்கிறாளா, என்ன? அதைத் தெரிந்து கொள்ளும் ஆவலை அவனால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

குதிரையை அந்தப் பல்லக்கின் அருகில் கொண்டு போய் நிறுத்தினான். பனைச் சித்திரம் போட்ட பல்லக்கின் மூடுதிரை தெரிந்தது. திரை அசைவது போலும் இருந்தது.

உடனே வந்தியத் தேவன் குதிரை மீதிருந்து கீழே குதித்தான். அதே கணத்தில் தேவராளன் தொண்டையிலிருந்து ஒரு விசித்திரமான சத்தம் வெளி வந்தது.

அக்கம் பக்கத்திலிருந்த புதர்களின் மறைவிலிருந்து ஏழெட்டுப் பேர் திடும் திடும் என்று எழுந்து பாய்ந்து வந்தார்கள். வந்தியத்தேவன் மீது விழுந்தார்கள். அவனால் மீறி அசையவும் முடியாதபடி பிடித்துக்கொண்டார்கள். கால்களையும் கைகளையும் துணியினால் கட்டினார்கள். கண்ணையும் ஒருவன் கட்டினான். உடைவாளை ஒருவன் பலவந்தமாக எடுத்துக் கொண்டான். பிறகு வந்தியத் தேவனை அந்தப் பல்லக்கினுள்ளே தூக்கிப் போட்டார்கள். சிலர் உடனே பல்லக்கைத் தூக்கிக் கொண்டு விரைந்து நடந்தார்கள். மற்றவர்கள் முன்னும் பின்னும் சென்றார்கள். தேவராளன் முன்னால் வழிகாட்டிக் கொண்டு சென்றான். ஒருவன் குதிரையைப் பிடித்துக் கொண்டு நடந்தான்.

இவ்வளவும் அதி விரைவில் நடந்து விட்டன. 'கண் மூடித் திறக்கும் நேரத்தில்' என்று சொல்லுவதும் மிகையாகாது. வந்தியத்தேவன் தன்னைப் பலர் வந்து ஏககாலத்தில் தாக்கியதும் திகைத்துப் போய் விட்டான். அந்தக் கைப தாக்குதலை அவன் எதிர் பார்க்கவேயில்லை. பல்லக்கில் அவனைத் தூக்கிப் போட்டு, பல்லக்கு நகர ஆரம்பித்த வரையில் அவனால் எதுவும் சிந்திக்கவும் முடியவில்லை. என்ன நடக்கிறதென்று தெரிந்து கொள்ளவும் முடியவில்லை.

ஆனால் பல்லக்கு நகர ஆரம்பித்ததும் சிறிது சிறிதாக மனம் தெளிவடைந்தது. கண்ணின் கட்டு சுலபமாக நழுவி

விட்டது. கட்டியிருந்த கைகளினால் பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு பார்த்தான். நதிக் கரையிலிருந்து குறுக்கே இறங்கிப் பல்லக்கு எங்கேயோ போகிறது என்பதை அறிந்து கொண்டான்.

அவனுடைய கையின் கட்டுக்களையும் காலின் கட்டுக்களையும் அவிழ்த்துக் கொண்டு விடுதலை பெறுவது அவ்வளவு கஷ்டமான காரியம் அன்று. பல்லக்கிலிருந்து குதிப்பதும் எளிதாகத்தான் இருக்கும். குதிரையோ பின்னால் வந்து கொண்டிருந்தது. அந்த ஏழெட்டுப் பேரையும் உதறித் தள்ளி விட்டுக் குதிரை மீது பாய்ந்தேறிச் செல்லுவதும் அவனுக்கு முடியாத காரியமாகாது. அவ்விதம் செய்யலாமா என்று யோசித்தான். ஆனால் ஏதோ ஒன்று குறுக்கே நின்று தடை செய்தது. அந்தப் பல்லக்கினுள்ளே ஓர் அபூர்வமான மணம் சூழ்ந்திருந்தது. அது முதலில் அவனுக்கு உற்சாகத்தை அளித்தது. அதன் கவர்ச்சியிலிருந்து விடுவித்துக் கொண்டு போக எளிதில் மனம் வரவில்லை. இந்தப் பல்லக்கு தன்னை எங்கே கொண்டு போய்ச் சேர்க்கப் போகிறது? நந்தினியிடந்தான் சேர்க்கும் என்று ஊகிப்பதற்குக் காரணங்கள் இருந்தன. அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவன் உள்ளத்தின் அடிவாரத்தில் இலேசாகத் தலை காட்டியது. வர வர அது பெரும் ஆர்வமாக வளர்ந்தது. அதற்கு எவ்வளவோ ஆட்சேபங்கள் தோன்றின. ஆட்சேபங்களையெல்லாம் மீறி ஆசை விசுவரூபம் கொண்டது. என்னதான் செய்து விடுவாள் நம்மை? என்னத்துக்காகத்தான் அழைக்கிறாள் என்று பார்த்து விடலாமே? ஏதாவது தெரிந்து கொள்ள முடிந்தால் தெரிந்து கொள்ளலாமே? சூழ்ச்சிக்குச் சூழ்ச்சி செய்யத் தன்னால் முடியாமலா போய் விடும்? மறுபடியும் அவளைப் பார்க்கும்படியான சந்தர்ப்பம் கிடைக்குமோ என்பது சந்தேகந்தான். தஞ்சாவூருக்குப் போக வேண்டிய அவசியம் இனி ஏற்படப் போவதில்லை. அங்கே போவதும் அபாயகரம். அதைக் காட்டிலும் வழியிலேயே பார்த்துவிடுவது எளிதான காரியம். இன்னும் ஒரு தடவை அவளையும் பார்த்துத்தான் வைக்கலாமே ?....

ஆம்; ஆம்! நந்தினியைப் பார்க்க வேண்டும் என்பதற்கு இன்னொரு அவசியமான காரணமும் இருந்தது.

இலங்கையில் அவன் பார்த்த அந்த ஊமை அரசி; — அவள் நந்தினி போல் இருந்ததாகத் தான் எண்ணியது சரியா? அதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா?



கிரிக்கெட் டெஸ்ட் மாட்ச் அம்பயருக்கு 400 ரூபாய் ஒரு டெஸ்ட்டுக்கு. ஆனால் ஆடாமல் ரிசர்வாக இருக்கும் ஆட்டக்காரருக்கு 750 ரூபாய்.

டைம்ஸ் ஆப் இந்தியா
'நாயக்'

இவ்விதம் வந்தியத்தேவன் யோசித்துக் கொண்டிருக்கும் போதே அவன் தலை சுழன்றது. தூக்கம் வருவது போலத் தோன்றியது. இல்லை, இல்லை; இது தூக்கம் இல்லை. பகலிலேதான் அவ்வளவு நேரம் தூங்கியாகி விட்டதே! இது ஏதோ மயக்கம். இந்தப் பல்லக்கில் சூழ்ந்துள்ள மணந்தான் இப்படி நம்மை மயக்குகிறது. ஐயோ! இது என்ன பயங்கர அபாயம்! பல்லக்கிலிருந்து குதித்துவிட வேண்டியதுதான் !

வந்தியத்தேவன் கைக் கட்டை அவிழ்த்துக் கொள்ள முயன்றான் ; முடியவில்லை. கைகள் அசையவேயில்லை. எழுந்து உட்கார முயன்றான்; அதுவும் முடியவில்லை. கால்களை அடித்துக் கொள்ளப் பார்த்தான் ; கால்களும் அசைய மறுத்தன. அவ்வளவுதான் ! கண்ணிமைகள் மூடிக் கொண்டன ; அறிவு விரைவாக மங்கியது; மயக்கம் அவனை முழுதும் ஆட்கொண்டது.

*　　　*　　　*

**வ**ந்தியத்தேவன் மயக்கம் தெளிந்து கண் விழித்த போது, பழைய நினைவுகள் வந்து, பல்லக்கிலிருந்து குதிப்பதற்கு முயன்றான். ஆனால் விந்தை ! விந்தை! அவன் இப்போது பல்லக்கில் இல்லை! விசாலமான ஓர் அறையில் இருந்தான். அந்த அறை தீபங்களினால் பிரகாசமாக விளங்கிற்று. இங்கேயும் ஏதோ ஒரு மணம் சூழ்ந்து இருந்தது ; ஆனால் பழைய மாதிரி மணம் இல்லை. அகிற் புகையின் மணம் போலத் தோன்றியது. முன்னே அவன் அநுபவித்தது அறிவை மயக்கிய மணம். இது அறிவைத் தெளிவு செய்த மணம். படுத்

திருந்த ஆசனத்திலேயே எழுந்து உட்கார்ந்தான்; சுற்று முற்றும் பார்த்தான். கதவு ஒன்று திறந்திருந்தது. வந்தியத் தேவன் ஆவலுடன் பார்த்தான்.

திறந்த கதவின் வழியாக நந்தினி வந்தாள். வந்தவளைக் கண் கொட்டாமல் அவன் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய வியப்புக்கும் திகைப்புக்கும் பல காரணங்கள் இருந்தன. வர்ணனைக்கெட்டாத அவளுடைய சௌந்தர்யம் ஒரு காரணம். எதிர்பாராத முறையில் அவளைச் சந்திக்கும்படி நேர்ந்தது இன்னொரு காரணம். இலங்கையில் அவன் பார்த்திருந்த மூதாட்டியின் உருவத்தோடு இந்த யுவதியின் உருவம் எவ்வளவு ஒத்திருக்கிறது என்ற எண்ணம் மற்றொரு காரணம். உருவங்கள் ஒத்திருக்கின்றனவா ? அல்லது அந்த மூதாட்டியேதான் உயரிய ஆடை ஆபரணங்களை அணிந்தபடியினால் இப்படித் தோற்றம் அளிக்கிறாளா?

இனிய கிண்கிணி நாதக் குரலில், ''ஐயா! நீர் மிகவும் நல்லவர்!'' என்று கூறினாள் நந்தினி.

வந்தியத் தேவன், ''வந்தனம்!'' என்றான்.

''நல்லவருக்கு அடையாளம் சொல்லாமற் போவதுதானே? தஞ்சை அரண்மனையிலிருந்து என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே போய் விட்டீர் அல்லவா?'' என்றாள் நந்தினி.

வந்தியத் தேவன் நகைத்தான்.

''தஞ்சைக் கோட்டைக்குள் வருவதற்கு உமக்கு நான் உதவி செய்தேன். என் கை விரலிலிருந்து பனை முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொடுத்தேன். அதை என்னிடம் திருப்பிக் கொடுத்து விட்டாவது போயிருக்க வேண்டாமா?'' என்று கேட்டாள்.

வந்தியத்தேவன் வெட்கித்து மௌனமாக நின்றான்.

''எங்கே ? இப்போதாவது அதைத் திருப்பிக் கொடுக்கலாம் அல்லவா ? அதன் உபயோகம் தீர்ந்து போயிருக்குமே? மறுபடியும் தஞ்சைக் கோட்டைக்கு வரும் எண்ணம் உமக்கு இல்லைதானே?'' என்று கூறி நந்தினி தன் அழகிய மலர்க் கரத்தை நீட்டினாள்.

''தேவி ! அந்த முத்திரை மோதிரத்தை இலங்கைத் தளபதி பூதி விக்கிரமகேசரி கைப்பற்றிக் கொண்டு விட்டார். ஆகையால் அதைத் திருப்பிக் கொடுக்க இயலவில்லை. மன்னிக்க வேண்டும்'' என்றான் வந்தியத்தேவன்.

''என்னுடைய ஜன்ம சத்துருவிடம் தான் உமக்குக் கொடுத்த மோதிரத்தைக் கொடுத்து விட்டீர் அல்லவா! மிக்க நன்றியுள்ள மனிதர் நீர்.''

''நானாகக் கொடுத்து விடவில்லை. பலவந்தமாக எடுத்துக் கொண்டார்கள்.''

''வாணாதி ராயர் குலத்தில் உதித்த வீராதி வீரர் பலவந்தத்துக்கு உட்பட்டு ஒரு காரியம் செய்தீரா? என்னால் நம்ப முடியவில்லை!''

''அம்மணி! இங்கே இச்சமயம் நான் வந்திருப்பதும் பலவந்தம் காரணமாகத் தானே? தங்களுடைய ஆட்கள்?....''

''உண்மையாகச் சொல்லும், ஐயா! நன்றாய் நினைத்துப் பார்த்துச் சொல்லும்! பலவந்தத்தினால் மட்டும் நீர் இங்கே வந்தீரா ? இஷ்டப்பட்டு வரவில்லையா? பல்லக்கில் ஏற்றப்பட்ட பிறகு கீழே குதித்து ஓடுவதற்கு உமக்குச் சந்தர்ப்பம் இல்லையா?'' என்று நந்தினி கேட்ட கேள்விகள் கூரிய அம்புகளைப் போல் வந்தியத் தேவன் நெஞ்சைத் துளைத்தன.

''ஆம் ; இஷ்டப்பட்டுத்தான் வந்தேன்'' என்றான்.

''எதற்காக வந்தீர் ?''

''தாங்கள் எதற்காக என்னை அழைத்து வரச் செய்தீர்கள்?''

''என் முத்திரை மோதிரத்தைத் திருப்பிக் கேட்பதற்காக!''

''அது மட்டுந்தானா?''

''இன்னும் ஒரு காரணமும் இருக்கிறது. என் கணவரின் பாதுகாப்புக்கு உட்பட்ட பொக்கிஷ நிலவறையில் நீர் அன்றிரவு இருந்தீர் அல்லவா ?''

வந்தியத்தேவன் திடுக்கிட்டான்.

''எனக்குத் தெரியாது என்று எண்ணினீர்? அழகுதான்! எனக்குத் தெரிந்திரா விட்டால் அன்றிரவு நீர் தப்பிச் சென்றிருக்க முடியுமா ?''

''தேவி!....''

''ஆம்; எனக்குத் தெரியும். பெரிய பழுவேட்டரையருக்கும் தெரியும். உம்மை அங்கேயே கொன்று போட்டு விடும்படி பழுவேட்டரையர் சுரங்க வழிக் காவலனுக்குக் கட்டளையிட்டார். அவர் அப்பால் சென்றதும் நான் அந்தக் கட்டளையை மாற்றிவிட்டேன். அதனால் நீர் பிழைத்தீர். உம்முடைய அழகான நண்பன் ஆபத்துக்கு உள்ளானான். இல்லாவிடில், அந்தப் பொக்கிஷ நிலவறையில் முத்துக் குவியல்களுக்குப் பக்கத்தில் உம்முடைய எலும்புகள் இப்போது கிடக்கும் !''

**வ**ந்தியத் தேவன் வியப்புக் கடலில் மூழ்கினான். அவள் கூறியவை யெல்லாம் உண்மையென்று அவனால் நம்ப முடியவில்லை. உண்மையில்லா விட்டால்

# ஆடியே பாடியே அகமகிழ்ந்தே

## வருகிறார் நியூட்ரின் முயலார்!

### தருகிறார் தின்னத்தின்ன திகட்டாத மிட்டாய்

எனக்கு இன்னும் கொஞ்சம்... நியூட்ரின் மாமா...

என் குட்டி தம்பிக்கும் ஒண்ணு கொடுங்க ... அவன் சேத்துத்தான் பிறந்தான்



தான் அன்று அங்கு ஒளிந்திருந்தது எப்படித் தெரிந்தது? சம்பிரதாயத்துக் காவது நன்றி கூறவேண்டியது அவசியம் என்று கருதி, ''அம்மணி...!'' என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

''வேண்டாம; மனதநல் இல்லா ததை வெளியில் எதற்காகச் சொல்லப் பார்க்கிறீர்? எனக்கு நன்றி செலுத்த முயல வேண்டாம்!''

''இல்லை, தேவி....''

''உம்முடைய உயிரை அன்று காப் பாற்றியதைப் பற்றி எதற்காகச் சொன்னேன், தெரியுமா? உம்முடைய நன்றியை எதிர்பார்த்தல்ல. மறுபடியும் அந்தச் சுரங்க வழியை உபயோகிக்கப் பார்க்க வேண்டாம் என்று எச்சரிப்ப தற்காகத்தான். அங்கே இப்போது மிகவும் வலுவான காவல் போட்டிருக் கிறது, தெரிகிறதா?''

''மறுபடியும் அந்தப் பக்கம் போகும் உத்தேசமே எனக்கு இல்லை.''

''அது ஏன் இருக்கப் போகிறது? உதவி செய்தவர்களை நினைக்கும் வழக் கமேதான் உமக்கு இல்லையே? உம்மால் உம்முடைய சிநேகிதன் ஆபத்துக்கு உள்ளானான். அவனை என்னுடைய அரண்மனைக்கே எடுத்து வரச் செய்து அவனுக்கு வைத்தியம் பண்ணுவித்துக் குணப்படுத்தி அனுப்பினேன். அதில் உமக்குத் திருப்திதானே? அல்லது நம்பிக்கைத் துரோகத்தைப் போல் சிநேகத் துரோகமும் உம்முடன் பிறந்ததா?''

**ந**ந்தினியின் வார்த்தை ஒவ்வொன் றும் விஷ பாணத்தைப் போல் வந்தியத் தேவனுடைய உள்ளத்தில் ஊடுருவிச் சென்றது. அவன் துடிதுடித்து மௌன மாயிருந்தான்.

''உம்முடன் கோடிக்கரைக்கு வந்த வைத்தியர் மகனைத்தான் உமக்குப் பதிலாகப் பிடித்துக் கொடுத்து அனுப்பி னீர். அவன் என்ன ஆனான் என்று விசாரித்தீரா?''

''தங்களைக் கேட்க எண்ணினேன்.''

''சொல்லுகிறேன்; ஆனால் உம்முடன் இலங்கையிலிருந்து புறப்பட்ட இள வரசர் அருள்மொழிவர்மர் என்ன ஆனார்? அதைச் சொன்னால் நான் வைத் தியர் மகனைப் பற்றிச் சொல்லுவேன்.''

வந்தியத் தேவனுக்கு உடம்பை ஓர் உலுக்கு உலுக்கிப் போட்டது. இள வரசரைப் பற்றி அறிவதற்காகத்தான் தன்னை இவள் இப்படிப் பாடாய்ப் படுத்தினளோ என்று தோன்றியது. ஏமாந்து போகக் கூடாது என்று தீர் மானித்துக் கொண்டான்.



## தேவாங்கு

தேவாங்குகளைப் பற்றிப் பொதுவாகக் கேள்விப் படாதவர்களும் அறியாதவர்களும் மிகக் குறைவே. தேவாங்குகள் ஏதோ ஒரு வகை விசேஷ சக்தி யைக் கொண்டிருப்பதாகப் பாமர மக்கள் நம்பு கின்றனர். இன்றும் கூட நாம் சாதாரணமாகத் தெருக்களில் சிலர் இத் தேவாங்குகளைக் கூட்டி லடைத்து, அதைக் கொண்டு பணம் சம்பாதிக்க முயல்வதைப் பார்க்கிறோம். இவர்கள் தேவாங்கின் கண் பார்வை மற்றவர்களை வசீகரிக்கும் சக்தி கொண்டுள்ளது என்றும், கண் வியாதி உள்ள வர்கள் இத் தேவாங்கைப் பார்த்தால் நல்லது என்றும், தேவாங்கின் கைகளினால் கொடுக்கப் பட்ட தாயத்தைக் கையில் கட்டினால் உடல் மெலிவு உள்ளவர்கள் நல்ல பலம் அடைவர் என்றும் சொல்லித் தாயத்து விற்பார்கள்.

மதுரை ஜில்லாவில் உள்ள காஞ்சரம்பேட்டை என் னும் ஊரின் அருகே உள்ள காட்டில், இலந்தை மரங்களின் மேல் கிளைகளின் ஊடே தேவாங்குகள் ஒளிந்து வாழ்கின்றன. இவ் இலந்தை மரங் களில் இருக்கக் கூடிய ''முசுறு'' எனப்படும் ஒரு வகை சிவப்பு எறும்பையும் முட்டைகளையும் தேவாங்குகள் பிரியமாக உண்கின்றன. இப்பிராணி எப்போதும் பயத்தால் மிரண்டிருப்பது போலவும், ஏதோ ஒன்றைப் பறிகொடுத்துவிட்டுச் சோகத்துடன் இருப்பது போன்றும் பரிதாபமாகக் காட்சியளிக்கும்.

பகல் முழுதும் தேவாங்குகள் மரங்களின் மேல் அடர்ந்த இலைகளுக்கிடையே பொந்துகளில் தூங்குகின்றன. தூங்கும்போது தேவாங்கு தலை யைத் தன் இரு தொடைகளுக்கிடையே வைத்து உடலைப் பந்து போல் சுருட்டிக்கொள்ளும் வழக்க முடையது. பகலில் வெளிச்சத்தில் தேவாங்கின் கண்கள் கூசுவதால் பகலில் ஓய்வெடுத்துக் கொண்டு இரவானதும் இரை தேடப் புறப்பட்டு விடும். தேவாங்குகள், பல்லி, ஓணான் போன்ற பிராணிகளையும், பலவித பூச்சிகளையும் சிறிய பறவைகளையும், மரங்களின் அருகே இருக்கும் தவளைகளையும் இலைகளையும், பழங்களையும், பறவை களின் முட்டைகளையும் உண்ணும்.

கூடுகளில் வளர்க்கப்படுகிற தேவாங்குகளுக்குப் பால், பழம், ஆட்டிறைச்சி, கரப்பான் பூச்சி, வெட்டுக் கிளி போன்றவை உணவாகக் கொடுக்கப்படுகின்றன. வெளி நாட்டவர் - குறிப்பாக இங்கிலாந்து நாட்டவர் ஒருவகைத் தேவாங்கை வளர்ப்புப் பிராணியாகக் கருதுகிறார்கள். நன்கு பழக்கிவிட்டால் தேவாங்கு தன் எஜமானனின் கைகளிலும், தோள் பட்டை யிலும் சர்வ சாதாரணமாக உட்கார்ந்துகொண்டு அவர் கொடுக்கும் உணவைத் தன் கைகளினால் வாங்கி உண்ணும். இக்காட்சி ரசிக்கக் கூடிய ஒன்று.

- ஆன்டோனி பேஸில்

''அரசி! அதைப் பற்றி மட்டும் என்னைக் கேட்க வேண்டாம்.''

''ஆம்! அதைப் பற்றி மட்டும் கேட்கக் கூடாதுதான்! கேட்டாலும் உம்மிடமிருந்து மறுமொழி வராது என்று எனக்குத் தெரியும். உம்முடைய காதலி எப்படியிருக்கிறாள்? அதைப் பற்றி யாவது எனக்குச் சொல்லலாமா?''

வந்தியத்தேவனுடைய கண்களில் தீப்பொறி பறந்தது. ''யாரைச் சொல்லுகிறீர்கள்? ஜாக்கிரதை!'' என்றான்.

''ஆகா! நான் ஜாக்கிரதையாகத்தான் இருக்கிறேன். நான் அந்தப் பழையாறை மகாராணியைச் சொல்லுவதாக எண்ண வேண்டாம். அவள் உம்மைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டாள். தன் காலில் ஒட்டிய தூசிக்குச் சமானமாக உம்மை மதிப்பாள். உம்மை இலங்கையில் கொண்டு சேர்த்துத் திருப்பியும் அழைத்து வந்தாளே! அந்த ஓடக்காரப் பெண்ணைப் பற்றிக் கேட்கிறேன். பூங்குழலி உமது காதலி அல்லவா?''

''இல்லை, இல்லவே இல்லை! அவளுடைய காதலர்களை அவளே எனக்குக் காட்டினாள். நள்ளிரவில் கோடிக்கரைச் சதுப்பு நிலத்தில் கிளம்பும் கொள்ளி வாய்ப் பிசாசுகளை எனக்குக் காட்டினாள். அவர்கள்தான் தன்னுடைய காதலர்கள் என்று சொன்னாள்.''

''அவள் பாக்கியசாலி! ஏனெனில், அவளுடைய காதலர்கள் ஒளி வடிவம் பெற்றிருக்கிறார்கள். பிரகாசமாகக் கண்முன் தோன்றுகிறார்கள். என்னுடைய காதலர்களோ இருள் வடிவமானவர்கள்; உருவம் அறிய முடியாதவர்கள். இருள் அடைந்த பாழும் மண்டபத்தில் நீர் எப்போதாவது நள்ளிரவு நேரத்தில் படுத்திருந்ததுண்டா? வௌவால்களும் ஆந்தைகளும் இறகுகளைச் சடபடவென்று அடித்துக் கொண்டு அந்த இருண்ட மண்டபங்களில் உருத் தெரியா வடிவங்களாகப் பறந்து திரிவதைப் பார்த்ததுண்டா? அம்மாதிரி வடிவங்கள் என் உள்ளமாகிய மண்டபத்தில் ஓயாமல் பறந்து அலைகின்றன. இறகுகளை அடித்துக் கொள்கின்றன. என் நெஞ்சைத் தாக்குகின்றன. என் கன்னத்தை இறகுகளால் தேய்த்துக் கொண்டு செல்கின்றன! அந்த இருள் வடிவங்கள் எங்கிருந்து வருகின்றன? எங்கே போகின்றன? ஏன் என்னைச் சுற்றிச் சுற்றி வட்டமிடுகின்றன? ஐயா! உமக்குத் தெரியுமா?'' — இவ்விதம் கூறிவிட்டு நந்தினி வெறி கொண்ட கண்களால் அங்குமிங்கும் பார்த்தாள்.

வந்தியத்தேவனுடைய வைர நெஞ்சமும் கலங்கிப் போயிற்று. ஒரு பக்கம் இரக்கமும் இன்னொரு பக்கம் இன்னதென்று தெரியாத பயமும் அவன் மனத்தில் குடிகொண்டன.

''தேவி! வேண்டாம்; கொஞ்சம் சாந்தி அடையுங்கள்!'' என்றான்.

''என்னைச் சாந்தி அடையும்படி சொல்வதற்கு நீர் யார்?'' என்று கேட்டாள் நந்தினி.

''நான் வாணர் குலத்தில் வந்த ஏழை வாலிபன். தாங்கள் யார், தேவி?''

''நான் யார் என்று கேட்கிறாய்! அதுதான் எனக்கும் தெரியவில்லை. அதைக் கண்டுபிடிக்கத்தான் முயன்று கொண்டிருக்கிறேன். நான் யார்? மானிடப் பெண்ணா? அல்லது பேயா, பிசாசா என்று கேட்கிறாயா?''

''இல்லை, இல்லை! தெய்வ லோகத்திலிருந்து தவறி விழுந்த தேவப் பெண்ணாகவும் இருக்கலாம் அல்லவா? தெய்வ சாபத்தினால்.....''

''ஆம்; தெய்வ சாபம் என் பேரில் ஏதோ இருக்கிறது. அது என்னவென்று மட்டும் தெரியவில்லை. நான் யார், எதற்காகப் பிறந்தேன் என்பதை அறியேன். இதுவரையில் ஒரே ஒரு சூசகத்தை மட்டும் தெய்வம் எனக்கு அளித்திருக்கிறது. இதோ பார்!'' என்று கூறி நந்தினி அவள் அருகில் இருந்த வாளை எடுத்துக் காட்டினாள். புதிதாகச் செப்பனிடப்பட்ட அந்தக் கூரிய வாள் தீப வெளிச்சத்தில் பளபளவென்று ஜொலித்துக் கண்ணைப் பறித்தது.

**வ**ந்தியத்தேவன் அந்த வாளைப் பார்த்தான். பார்த்த உடனே அது கொல்லன் பட்டறையில் தான் பார்த்த வாள் என்பதைத் தெரிந்து கொண்டான். இது வரையில் நந்தினியின் வார்த்தைகளாகிற விஷ பாணங்களினால் அவன் துடிதுடித்துக் கொண்டிருந்தான். இப்போது இரும்பினால் செய்த வாளாயுதத்தைப் பார்த்ததும் அவனுடைய மனம் திடப்பட்டது. ஏனெனில் வாள், வேல் முதலிய ஆயுதங்கள் அவனுக்குப் பழக்கப்பட்டவை. பிறந்தது முதல் அவனுடன் உறவு பூண்டவை. ஆகையால் பயமில்லை! நந்தினி அந்த வாளைத் தன் பேரில் பிரயோகிப்பதாயிருந்தாலும் பயம் கிடையாது!

''தேவி! பார்த்தேன்; வாளைப் பார்த்தேன். வேலைப்பாடு அமைந்த வாள்; அரச குலத்துக்கு உரிய வாள். வீராதி வீரர்களின் கைக்கு உகந்த வாள். அது மெல்லியல் கொண்ட தங்கள் அழகிய கையில் எப்படி வந்தது? அதன் மூலம் தெய்வம் தங்களுக்கு அளித்திருக்கும் சூசகந்தான் என்ன?'' என்று கேட்டான்.

(தொடரும்)

# ரகுபதி ராகவ மகாத்மா காந்தி

## தமிழாக்கம்: ராஜாஜி

10

பௌதிக விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள்: அணுக்களுக்கு இடையில் ஒரு சக்தி உண்டு; அதனால் அணுக்கள் ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டு நிற்கின்றன என்று. இந்தப் பிரகிருதி சக்தி இல்லாவிடில், பூமி பொடியாகிப் போகும். எல்லா ஜீவராசிகளின் தேகங்களும் நீறாகிப் போகும். உயிருக்கு இடமே இராது. அசேதனப் பொருள்கள் வடிவங் கொண்டு நிலைத்து நிற்க இந்தப் பிணைப்புச் சக்தி எவ்வளவு அவசியமோ, அப்படியே சேதன உயிர்களின் வாழ்க்கைக்கு அன்பு என்கிற பிணைப்புச் சக்தியும் அவசியம். தகப்பனும் பிள்ளையும் அன்பினால் கட்டுப்படுகிறார்கள். அதுவே சகோதரர்களுக்குள்ளும், சகோதர சகோதரிகளுக்குள்ளும், நண்பர்களுக்குள்ளும் பிணைப்பைக் காக்கும் சக்தி. அன்பு என்கிற விஸ்வ சக்தியை நாம் கண்டு விஸ்தரித்துப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதைக் கொண்டு உயிருள்ள சகல பிராணிகளும் ஒன்றாக இணைந்து நிற்கச் செய்ய வேண்டும். இதுவே ஈசுவரனை அறியும் மார்க்கம். அன்பே உய்யும் வழி. வெறுப்பு நாசத்துக்கு வழி. (யங் இந்தியா 5-5-20)

ஒன்றுகூட்டும் பிணைப்புச் சக்தியைப் போலவே இயற்கையில் பிரித்து விலக்கும் சக்தியும் உண்டு. ஆயினும் இவ்விரண்டில் பிணைப்பு வேகமே ஓங்கி வேலை செய்யும். பிணைப்பினால்தான் உலகத்தில் உயிர் நிலைத்து வருகிறது. பரஸ்பர அன்பினாலேதான் உலகம் நடைபெற்று வருகிறது. மற்றப் பிராணிகளை அழித்து ஒரு மனிதன் வாழ முடியாது. தன்னைத்தான் காப்பாற்றிக் கொள்வதற்காயினும் மற்றப் பிராணிகளை மனிதன் பேணுவது அவசியம்.

ஒருவரை ஒருவர் காத்து வருவதாலேதான் சமூகங்கள் நிலைத்து நிற்கின்றன. ஒரு தேசத்து மக்கள் ஒருவரை ஒருவர் மதித்து ஒருவருக்கொருவர் உதவியும் வந்து, சமூக வாழ்க்கையைக் காப்பாற்றி வருவதைப் போல், பிரபஞ்சம் முழுவதற்கும் அந்த அன்பு முறையை விஸ்தரித்துப் பெருக்க வேண்டும். குடும்பப் பிணைப்பைத் தேசத்துக்கும் சமூகத்துக்கும் விஸ்தரித்திருக்கிறோம். சமூகப் பிணைப்பை உலகளவு விஸ்தரிக்க வேண்டும். உலகம் முழுவதும் ஒரு பெரிய குடும்பம் ஆக வேண்டும். (யங் இந்தியா 2-3-22)

காலனுடைய அட்டூழியம் பெரிதேயாயினும் அதற்கிடையில் உயிர் அழியாமல் இருந்து வருகிறது. பிரகிருதியில் உயிர்த் தத்துவத்தின் வேகம் மேலானது. யமனுடைய ஆதிக்கத்துக்கு இடையில் உயிர் வெற்றி பெற்று வருகிறது. உலகத்தின் உண்மைப் பண்பு அழிவல்ல. உயிர்த் தத்துவமே உலகப் பண்பு. இந்தத் தத்துவத்தைக் கண்டபின் நாமும் அதைப் பற்றி நிற்க வேண்டும். தினசரி வாழ்க்கையில் அதைத் தர்மமாகக் கடைப்பிடித்து வாழ வேண்டும். பிணக்கமோ பகையோ ஏற்பட்டால் அன்பைக் கொண்டு அதைத் தீர்த்துக் கொள்ள வேண்டும். அன்பைச் செலுத்திப் பகைவனை வெல்ல வேண்டும். என் வாழ்க்கையில் இந்த முறையைத்தான் நான் அனுசரித்து வந்திருக்கிறேன். தப்பும் தவறும் ஆயினும் இந்த உபாயத்தைத்தான் உபயோகித்து வந்திருக்கிறேன். எல்லாச் சிக்கல்களையும் நான் தீர்த்துக் கொண்டேன் என்று சொல்ல மாட்டேன். ஆனால் ஒன்று நிச்சயம்; வெறுப்பினால் நான் ஒன்றும் சாதித்ததில்லை. நான் கண்ட வெற்றியெல்லாம் அன்பின் வழியேதான். (யங் இந்தியா 1-10-31)

மனித வர்க்கம் ஒப்புரவினால் மேம்பாடு அடைந்து வருகிறது. முன்னேற்றம் பெறச் செய்யும் சக்தி அன்பேயாகும். அன்பே மனிதனைக் காக்கும் சக்தியும் உயர்த்தும் சக்தியும் ஆகும். நம்மையும் அறியாமல் மனித வர்க்கத்திலுள்ள இந்த ஒப்புரவு வேலை செய்து வருகிறது. மனித ஜாதி உயிருடன் இருப்பதே பிரித்து விலக்கும் வேகங்களைக் காட்டிலும், ஒன்று சேர்க்கும் அன்பு வேகமே அதிக சக்தி வாய்ந்தது என்பதற்கு அத்தாட்சியாகும். (யங் இந்தியா 12-11-31)

வாழ்க்கைக்கு மந்திரம் அன்பு அல்லது அஹிம்ஸை. இல்லாவிடில் கட்டாயமாக யுத்தங்கள் வந்துகொண்டேயிருக்கும். ஒரு யுத்தத்துக்கு மேல் அடுத்த யுத்தத்தின் கோரம் அதிகரித்துக் கொண்டே போகும். (ஹரிஜன் 28.9.36)

## புதுமையான லைப்ரரி!

புத்தகங்கள் இருக்கும் லைப்ரரியைத்தான் நாம் பார்த்திருக்கிறோம். நியூயார்க் பள்ளி ஒன்றில் 'மிருக லைப்ரரி' ஒன்றும் இருக்கிறது. இங்கே சிறு குழந்தைகள் வளர்க்கத் தேவையான மிருகங்கள் கிடைக்கும். ஒரு குழந்தை ஒரு மிருகத்தை எடுத்துக் கொண்டு போய்க் கொஞ்ச நாள் அதைத் தன் வீட்டில் வைத்து வளர்த்த பிறகு திரும்ப லைப்ரரியில் கொண்டு விட்டு விட்டு மீண்டும் வேறொரு மிருகத்தை எடுத்துப் போய் வளர்க்கலாம். ஒரு மாணவன் ஒரு மிருகத்தை எடுத்துக் கொண்டு போகும் போது அது பற்றிய விவரங்கள் அடங்கிய புத்தகம் ஒன்றையும் அவனுக்குக் கொடுக்கிறார்கள். மாணவர்கள் மிருகங்களைப் பற்றிப் படிக்கும்போது அந்தப் பாடத்தை நன்றாகப் புரிந்துகொள்ள மிக உதவியாக இருக்கிறதாம் இந்த லைப்ரரி! அமெரிக்காவில் கிராமபோன் ரிகார்டுகள் லைப்ரரியும் இருக்கிறது.

- தகவல்: சரோஜா ராமச்சந்திரன்

## இராட்சதக் கூடாரம்!

ஜெர்மனியில் மூனிச் நகரில் 1972ஆம் ஆண்டில் நடைபெறவிருக்கிற ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிகளுக்காக, இப்பொழுதிருந்தே, தீவிரமான ஏற்பாடுகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. விளையாட்டுப் போட்டி எதுவும், திறந்த வெளியில் நடக்காது. காற்று, மழை, வெயில் எதுவும் விளையாட்டுப் போட்டியைச் சிறிதும் பாதிக்காத வண்ணம், எல்லா விளையாட்டுத் திடல்களையும் மூடும்படியான ராட்சதக் கூடாரம் அமைக்கப்படுகிறது. கட்டடத் தொழிலில், முதன் முறையாக ஒரு சிறிய நகரம் முழுவதையும் ஒரே கூடாரத்தினால் மூடுவது இதுவே முதல் தடவை.

இவ்வித "அதிசயமான கூடாரத்"தை ஜெர்மன் கட்டடக் கலைஞர் பீரீ ஆட்டோ உருவாக்கியிருக்கிறார். ராட்சதத் தூண்களை நிறுவி, அதன் உச்சியிலிருந்து எஃகு வலைகளை மற்றத் தூண்களுக்குப் பரப்பி, பின்னர் இறுதியாகப் பூமியோடு சேர்த்தாகப் பிணைப்பதே இவரது முறை. எஃகு வலைகளுக்கும் பதிலாக, செயற்கைப் பொருளினாலான வலைகளையும் மாட்டி, அதன் மீது விரும்பியவண்ணம் கண்ணாடி, பிளாஸ்டிக் அல்லது துணியைப் போர்த்தி விடலாம்.

இதே போன்ற முறையைத்தான் மூனிச் நகரில் ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டித் திடல்களுக்கும் பயன்படுத்த பீரீ ஆட்டோ எண்ணியுள்ளார். -- பூ. பி. எஸ்.

***

## அம்பயர் விழுந்தார்!

பம்பாயில், இந்திய ஆஸ்திரேலிய கோஷ்டிகளுக்கிடையே நடந்த கிரிக்கெட் பந்தயத்தின் போது காற்று பலமாக வீசியதால் அம்பயரின் தொப்பி பறந்துவிட்டது. அதைப் பிடிக்க



முயன்ற அம்பயர் வழுக்கிக் கீழே விழுந்து விட்டார்! ஆடுபவர்கள் பலமுறை விழுந்திருக்கிறார்கள். ஆனால் உலகக் கிரிக்கெட் வரலாற்றிலேயே அம்பயர் விழுந்தது இதுதான் முதன்முறை என்று சொன்னார் ஆனந்த ராவ்.

- காமெண்டரியில் கேட்டு எழுதியவர்: முரளி

☐ ஒவ்வொரு நாளையும் நமது வாழ்வின் கடைசி நாளாக நினைத்துக் காரியங்களைச் செய்து முடிக்க வேண்டும்.

ஸ்கைராஸ் (பேஜண்ட்)

தகவல் - 'முத்து'

☐ பழைய தொல்லைகளையெல்லாம் மறந்திருங்கள். புதிதுதான் ஏராளமாக வந்துகொண்டிருக்கின்றனவே!

- கன்ஸ்ட்ரக்ஷன்டைஜஸ்ட்

☐ "தினமும் நாம் செய்யும் வேலைதான் நமக்கு உற்ற தோழன்."

'ஸ்கிரீன்'

☐ எவன் பிறரது நற்செயல்களைக் கண்டு மகிழ்ச்சி கொள்வதில்லையோ அவனால் நற்செயல்கள் எதுவும் செய்ய இயலாது.

- மார்க்கஸ் அன்டோனினஸ்

அனுப்பியவர்: வி.ச.வாசுதேவன்

☐ உண்மை நம் பக்கத்தில் இருக்க வேண்டும் என்று நாம் விரும்புவது வேறு. நாம் உண்மையின் பக்கத்தில் இருக்க வேண்டும் என்று விரும்புவது வேறு. -- ரிச்சர்ட் பீட்லி

☐ முதலில் அமைதியுடன் இருந்து விட்டுப் பிறகு காரியம் வரும்போது பதற்றப்படுவதைவிட, பதற்றமாக இருந்து விட்டுக் காரியத்தின்போது அமைதியாக இருப்பதே மேல். -- சர்ச்சில்

☐ நண்பனைப் பெற ஒரே ஒரு வழிதான் உண்டு. அது நண்பனாய் இருப்பதுதான்.

- ஏ. சண்முக சுந்தரம்.

***

## பாம்பின் கால்...

வயதான பிரம்மச்சாரியிடம் அவன் நண்பன் சொன்னான்: "டேய், நீ எந்தப் பெண்ணைப் பற்றி உன் அம்மாவிடம் சொன்னாலும் வேண்டாமென்று உன் அம்மா மறுத்து விடுவதாகக் கூறுகிறாய். உன்னுடைய அம்மாவைப் போலவே தோற்றத்திலும் குணத்திலும் உள்ள ஒரு பெண்ணைக் கண்டு பிடித்துக் கேட்டால் சம்மதம் தெரிவிக்காமல் இருக்க முடியாது. முயற்சி செய்து பாரேன்."

அப்படியே செய்தான் பிரம்மச்சாரி.

"என்ன நான் சொன்னபடி செய்தாயா?" என்று கேட்டான் நண்பன்.

"செய்தேன்."

"என்ன ஆயிற்று?"

"என்னுடைய அப்பா வேண்டாமென்று சொல்லி விட்டார்!" -'கேலியோம்'

# ராமாயணம்

## ராஜாஜி

## 40. ராம - பரத சந்திப்பு

லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட ராமன் மெதுவாகச் சொன்னான் :

**இலக்குவ! உலகம் ஓர் ஏழும் ஏழும் நீ**
**கலக்குவை என்பது கருதினால் அது!**
**விலக்குவ(து) அரிது அது விளம்பல் வேண்டுமோ?**
**புலக்குரித்(து) ஒரு பொருள் புகலக் கேட்டியால்**

இது கம்பர் பாட்டு. வால்மீகியும் இப்படியே சொல்லுகிறார்.

''நீ வெற்றி வீரன். பரதனுடைய பெருஞ்சேனையை நாசமாக்கித் தீர்ப்பாய். அதில் சந்தேகமில்லை. ஆனால் ஒரு விஷயம் யோசிக்க வேண்டியது இருக்கிறது. அதைச் சொல்லுகிறேன், கேள்!'' என்று ஆரம்பித்து, கோபத்தில் லக்ஷ்மணன் விஷயங்களைச் சரியாகக் காணவில்லை என்பதை விளக்கினான்:

''லக்ஷ்மணா! பரதனே நேரில் வருகிறான் என்கிறாய். அப்படியானால் நம்முடைய வில்லுக்கும் அம்புக்கும் சுத்திக்கும் என்ன வேலை? தந்தையின் ஆணையை அழித்தும் பரதனைக் கொன்றும் ராஜ்யமும் பழியும் சம்பாதித்து நாம் என்ன பிரயோஜனத்தைப் பெறுவோம்? பந்துமித்திரர்களை அழித்துவிட்டுச் சம்பாதிக்கும் சொத்தானது விஷம் கலந்த பணியாரத்தைப் போலாகும். எதற்காக ராஜ்யம் அல்லது தனம் சம்பாதிக்க விரும்புகிறோம்? யாருக்குச் சுகமும் சந்தோஷமும் தந்து அதனால் நாமும் சந்தோஷம் அடையலாம் என்று சம்பாதிக்கிறோமோ, அவர்களை அழித்துவிட்டு அந்தப் பொருளை நாம் அடைவதில் என்ன பயன்? அதர்ம வழியில் சம்பாதிக்கும் ராஜ்யம் நமக்கு வேண்டாம். லக்ஷ்மணா! நீயும், பரதனும், சத்ருக்னனும் என்னுடன் இருந்து அநுபவிக்க முடியாத சுகம் எனக்கு வேண்டாம். இது நிச்சயம்.''

மேலும் சொன்னான்: ''நான் சொல்வதைக் கவனித்துக் கேள். பரதன் இப்போது இங்கே ஏன் வருகிறான் என்பதை நான் அறிவேன். அவன் எள்ளளவும் தருமம் தவறாதவன். நம்மில் யாருக்காவது அவன் எப்போதாவது தீமை செய்ததுண்டா? ராஜ்யத்தை எனக்குக் கொடுத்துவிடுவதற்காகவே அவன் வருகிறான். கைகேயியைக் கோபித்து, தந்தைக்கும் ஏதோ சொல்லிச் சமாதானப்படுத்தி



விட்டு, என்னைத் திருப்பி அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறான் என்பது நிச்சயம். பரதனை நான் அறிவேன். நீ அவனைப் பற்றிக் கோபாவேசமாகப் பேசியதெல்லாம் அதருமம். அப்படிப் பேசலாகாது; ராஜ்யத்தைச் சம்பாதிக்கவா ஆசைப்படுகிறாய்? அப்படியானால் சொல். பரதன் வந்ததும் அவனுக்குச் சொல்கிறேன். 'லக்ஷ்மணனுக்கு ராஜ்யம் வேண்டுமாம். அவனுக்குக் கொடுத்து விடு' என்று. நான் இப்படிச் சொன்ன மாத்திரத்தில் பார், 'எடுத்துக் கொள்' என்று உனக்கு உடனே தந்து விடுவான். சந்தேகமில்லை'' என்று சொல்லிச் சிரித்தான்.

லக்ஷ்மணன் வெட்கத்தால் உடல் குறுகிப் போனான்.

''ஒரு வேளை நம்முடைய தந்தை சக்கரவர்த்தியே நம்மைப் பார்க்க வந்திருக்கலாம்'' என்றான் லக்ஷ்மணன்.

இத்தனை சேனையும் ஆர்ப்பாட்டமும் யுத்தத்துக்குத்தான் இருக்கும் என்று முதலில் எண்ணினான். ராமன் சொன்னதைக் கேட்டதும், அது அசம்பாவிதம் என்கிற தீர்மானத்துக்கு உடனே வந்தான். மற்று என்ன காரணம் இருக்கக்கூடும் என்று யோசித்து ஒருவேளை தசரதனே வந்திருக்கலாம். அவனுடன் இந்தச் சேனையும் பெரும் பரிவாரமும் வருவது சகஜமே என்று சமாதானம் பண்ணிக் கொண்டான்.

தான் பரதனைப் பற்றிப் பேசிய பேச்சுக்கள் தகாதவை என்று உணர்ந்து, வெட்கப்பட்டு இம்மாதிரி தடுமாற்றமாகப் பேசினானே என்றும் உரையாசிரியர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

லக்ஷ்மணன் வெட்கப்பட்டுப் போனான் என்பதை அறிந்த ராமன், ''அப்படியுமிருக்கலாம்! வனவாசத்தில் கஷ்டப்படுகிறோமென்று எண்ணிச் சக்கரவர்த்தி நம்மையும் முக்கியமாகச் சீதையையும் ஊருக்கு அழைத்துப் போக வந்திருக்கலாம். ஆனால் மன்னனுடைய வெண்கொற்றக் குடையைக் காணவில்லையே? தந்தை வந்திருந்தால் அது இருக்குமே? எப்படியாயினும் சரி. நீ சாந்தமடைவாய்'' என்றான்.

லக்ஷ்மணன் ராமசந்திரன் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அருகே போய்க் கை கூப்பியவண்ணம் நின்றான்.

*   *   *

சேனையைத் தொலைவில் நிறுத்தி விட்டு, புகை கிளம்பிய இடத்தைச் சரியாகப் பார்த்து வரப் பரதன் சில ஆட்களை அனுப்பினான். சற்று நேரம் கழித்து அவர்கள் சமாசாரம் கொண்டு வந்தார்கள். அதுவே பரத்வாஜர் குறிப்பிட்ட இடம்; அங்கே காணப்படும் பர்ணசாலை ராமனுடைய பர்ணசாலை என்பது நிச்சயம் என்று தெரிந்தவுடன் பரதன் புறப்பட்டான்.

தன் மேல் வந்த பழியை நினைத்து நினைத்துப் பயந்து, இன்னது செய்ய வேண்டியது, இப்படிச் சொல்லவேண்டியது என்று யோசித்துக் கொண்டே போனவன், ராமன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்ததும் எல்லாம் மறந்து விட்டான். புல் தரையில் உட்கார்ந்திருந்த ராமனைக் கண்டதும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அண்ணன் இருந்த இடம் நோக்கி ஓடினான்.

துக்கம் மேலிட்டுக் கண்களில் நீர் பெருக, ஒன்றும் பேச முடியாமல், ''அண்ணா!'' என்று கதறிக் கொண்டு ராமன் காலடியில் விழுந்தான். 'அண்ணா' என்ற ஒரு வார்த்தைக்கு மேல் பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொள்ள விம்மி அழுதான்.

இதற்குள் சுமந்திரனும் குகனும் வந்து சேர்ந்தார்கள்.

ஜடையும் மரவுரியும் தரித்துத் தன் முன் கைகூப்பிய வண்ணம் தரையில் விழுந்து கிடந்த பரதனைப் பார்த்தான் ராமன். துக்கத்தாலும் உபவாசத்தாலும் தேகம் மெலிந்து, நிறம் மாறிப் போய்க் கிடந்த பரதனை வாரியணைத்து உச்சி மோந்து மடியின் மேல் உட்கார வைத்து, ''குழந்தாய்,



தந்தை சக்கரவர்த்தியைத் தனியாக விட்டுவிட்டு நீ இப்படி வனத்துக்கு வந்து விடலாமா? ஏன் இந்த மாதிரி இளைத்துப் போயிருக்கிறாய்?'' என்று ராமன் கேட்டான்.

பரதன் பேச்சிழந்து கிடந்தான். பரதனுடைய நிலையைப் பார்த்து ராமன் மெதுவாக, ராஜ்யத்தின் யோக க்ஷேமத்தைப் பற்றி வழக்கப்படி அரச குலத்தவர்கள் சந்திக்கும் சமயங்களில் கேட்பது போல் கேட்டான். கொஞ்ச நேரம் கழித்துச் சமாளித்துக் கொண்டு பரதன் பேசலானான்.

''ராஜ தர்மத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது, அண்ணா? சிம்மாசனம் ஏறி ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டியவன் நீ இருக்க நான் எவ்வாறு அரசனாவேன்? அல்லது அரசனுக்குரிய தருமத்தை அனுசரிப்பேன்? எனக்குரிய தருமம் உனக்கு அடிமை செய்வது. அது எனக்குப் பிராப்தமாகவில்லை. மூத்தவன் ராஜ்யப் பொறுப்பைத் தாங்க வேண்டியவன். இது ராஜ குலப் பொது தர்மம். நம்முடைய குலத்திலும் இதுவே முறை. அயோத்தியைக்கு என்னுடன் வந்து பட்டம் சூடிக் கொண்டு குலத்துக்கும் ஜனங்களுக்கும் மங்களம் அருள்வாய். மகாராஜாவான தந்தை அவர் செய்ய வேண்டிய வேள்விகளையெல்லாம் செய்து முடித்து, புகழ் பெற்ற மகா வீரர், சுவர்க்கலோகம் புகுந்தார். நான் கேகய தேசத்தில் இருக்கும் போதே நீங்கள் அயோத்தியை விட்டு வனம் சென்று விட்டீர்கள். அந்தப் பிரிவின் துக்கத்தைத் தாங்கமாட்டாமல் உயிர் நீத்தார். வருந்தாதே! எழுந்து நம் தந்தைக்குச் செய்ய வேண்டிய கிரியைக் கடனைத் தீர்ப்பாயாக! நானும் சத்ருக்னனும் செய்தாயிற்று. அண்ணா! தந்தைக்கு மிகப் பிரியமாக வளர்ந்தாய். உன் ஞாபகமாகவே தந்தை உயிர் நீத்தார். நீ விடவேண்டிய எள்ளும் நீருமே அவருக்குச் சாந்தி தரும்'' என்று கம்பீரமாகச் சொன்னான்.

கௌசல்யா தேவி, குகன், பரத்வாஜர் இவர்களிடம் பரதன் சொல்ல நேரிட்ட சமாதானங்கள் — அதாவது நடந்த அனர்த்தங்களில் தனக்கு ஒரு சம்பந்தமுமில்லை என்கிற சமாதானங்கள்—ராமனிடத்தில் சொல்ல வேண்டிய அவசியமே இருக்கவில்லை. துக்கத்தால் பீடிக்கப்பட்டு, தேகம் மெலிந்து, முகம் வாடி நின்ற அந்தப் பரதனைப் பார்த்ததே போதுமல்லவா? சமாதானங்களுக்கு அவசியமே இருக்கவில்லை. ராமனை அயோத்தியைக்கு அழைத்துப் போகிற விஷயம் ஒன்றே பரதனுடைய காரியமாக நின்றது. அதையே பேசினான். தன்னைப் பற்றிப் பேசவில்லை.

தந்தை இறந்தார் என்ற சொல்லைக் கேட்டதும், ராமன் கோடரியால் வெட்டப்பட்ட மரம் போல் கீழே விழுந்தான்.

**நந்தா விளக்கனைய நாயகனே, நானிலத்தோர்**
**தந்தாய், தனியறத்தின் தாயே, தயாநிலையே!**
**எந்தாய், இகல்வேந்தர் ஏறே, இறந்தனையே**
**அந்தோ இனிவாய்மைக்(கு) ஆருளரே**
**மற்றென்றான்**

ராஜகுமாரர்களும் சீதையும் சுமந்திரனுடன் ஆற்றுக்குச் சென்றார்கள். அங்கே ஸ்நானம் செய்து, கைநிறைய ஜலத்தை எடுத்துத் தந்தையைத் தியானித்து ஆற்றில் விட்டார்கள். பிறகு வழக்கப்படி செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து விட்டுப் பர்ண சாலைக்கு வந்து ராஜகுமாரர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்து நின்று, தந்தையை நினைத்துப் பெருங் குரலில் அழுது துக்கம் தீர்த்துக் கொண்டார்கள்.

இவ்விடத்தில் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். பரதன் வந்து ராமனைப் பார்த்த கட்டத்தில் ராமன் பரதனுக்கு உபதேசித்ததாக ஒரு நீண்ட ராஜ தரும உபதேசம் வால்மீகி எழுதியிருக்கிறார். நம்முடைய இதிகாச புராணங்களில் இவ்வாறு ராஜ நீதியும், தருமோபதேசமும் அடிக்கடி வரும். தற்காலத்து நூல்களில் ஆசிரியர்கள் முக்கியமாகக் கருதி வருவது நிகழ்ச்சி வேகமும் நாடகத்துக்குரிய வியப்பு, அதிர்ச்சி முதலிய லக்ஷணங்களும். பழைய நூல்களில் இந்த ரஸங்கள் வேண்டிய அளவு இருந்தாலும் கூடவே மக்களின் சீலத்தை வளர்க்கும் உபதேசங்களும் மத்தியில் தாராளமாகச் சேர்க்கப்பட்டிருக்கும்.

மேலும் இந்தக் கட்டத்தில் வால்மீகி ராமாயண அத்தியாயங்கள் கிரமம் தவறி முன்னும் பின்னுமாக அமைந்து விட்டிருக்கின்றன என்று பழைய உரை ஆசிரியர்களே கண்டிருக்கிறார்கள். கம்பர் இவையெல்லாம் கவனித்துத் தற்கால ரீதியாகவே ஒழுங்காகப் பாடி விட்டிருக்கிறார். துளசிதாஸருடைய ராமாயணமோ இந்த ராம - பரத சந்திப்புக் கட்டத்தில் ஒரே பக்தி சாகரமாக அலைகள் மோதிப் பருவ காலக் கடலைப் போல் பொங்குகிறது. அதில் எந்தச் சிக்கலுக்கும் இடமே இல்லை.

(தொடரும்)

# சுத்தமான
# மனம் கவரும் வெண்மைக்கு




## சிங்கம் மார்க்
## விக்டோரியா
## ப்ளு ஓ ஓ பி (OOB)

(மிகச் சிறந்த நீலம்)

சிறிதளவே விக்டோரியா ப்ளு ஓ ஓ பி உபயோகித்ததில் உங்கள் ஆடைகளுக்குத்தான் என்ன வெண்மை! ஆடைகளை பளபளப்பான வெண்மையாக்குகிறது. உங்களுடைய சட்டைகள், வேஷ்டிகள், விரிப்புகள் முதலியவைகளை அதிக வெண்மையுடன் வைக்க இதுவே சிறந்த சிக்கனமான முறை.



VAPI:UP:6/69

தயாரிப்பாளர்கள்: அல்ட்ராமரீன் & பிக்மெண்ட்ஸ் லிமிடெட், அம்பத்தூர், மதராஸ் 53

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: கெம்[illegible]ஸ் ட்ரேடிங் கம்பெனி, 318, லிங்கச் செட்டித் தெரு, மதராஸ்-1

விநியோகஸ்தர்கள்: மெஸர்ஸ் என். ரமண்லால் பிரதர்ஸ், 416, தங்கசாலைத் தெரு, சென்னை-1

# சிலையைத் தேடி...

கதை: வாண்டுமாமா

சுங்சிங்கின் அறையில் சுறுசுறுப்பு ஏற்பட்டது. புத்தக அலமாரி நகர்ந்தது. ரேடியோ டிரான்ஸ்மிட்டரை எடுத்துக் கொண்டு ரவியையும் இழுத்துக் கொண்டு வந்தவன் சுரங்கப் பாதையினுள் மறைந்தான். சுங்சிங் சில நிமிஷங்களில் தன்னை ஒரு நோயுற்ற வயோதிகப் பெண்ணாக உருமாற்றிக் கொண்டார்.
சீனர்களுக்கே கைவந்த கலை அது........

12

சித்திரம்: ரமணி..




பெண்ணாக மாறிய 'சுங்சிங்' படுக்கையில் கிடந்தார். கதவு தட்டப் பட்டது...


















சில மணி நேரத்துக்குப் பிறகு




மாவு என்பது வெடி மருந்துக்கான சங்கேத பாஷை.....










தொடரும்....





# ஜூடோ கணபதி!

சமீப காலமாக வெளியாகிக் கொண்டிருக்கும் ஆங்கிலத் திரைப் படங்களிலும், தமிழ்த் திரைப் படங்களிலும், மற்றும் பிற மொழிப் படங்களிலும் வெகுவாகப் புகுத்தப்பட்டு ரசிகர்களைக் கவரும் சண்டைகள்:

ஜூடோ, கராத்தி!

நம் குழந்தைகளின் விளையாட்டு மொழியில் சொல்லப் போனால் இவற்றை இப்படித்தான் அழைக்க வேண்டும்: 'டிஜிம்–டிஜிம்!' (குத்து); 'சதக் – சதக்!' (வெட்டு).

''எதிராளி எப்பேர்ப்பட்ட பலசாலியாக இருந்தபோதிலும் அவனை இந்த ஜூடோ கராத்தி முறைகளில் எளிதில் அடித்து வீழ்த்திவிடலாம்'' என்று மதுரை, ஆரப்பாளையம் ஜூடோ சண்டைப் பயிற்சியாளர் திரு எம். ஆர். கணபதி கூறுகிறார்.

அவரையும், அவரிடம் பயிற்சி பெறும் மாணவர்களையும், பயிற்சிக் கூடத்தையும் சண்டைகளையும் நேரில் காணும் நமக்கு எதிர்வாதம் செய்யத் துணிவு வருவதில்லை.

தொள தொள வென்று முழுக்கைச் சட்டையும் முழுக்கால் சட்டையும் அணிந்து, இடுப்பில் பயிற்சியின் தரத்துக்கு ஏற்ப வர்ணப் பட்டையைக் கட்டிக் கொண்டு சண்டை போடுகிறார்கள். வர்மப் பிடிகளும், உதைகளும், வெட்டு, அடி, குத்து, கால்களைப் போட்டு 'லாக்' செய்தல் முதலியனவும் ஜூடோ – கராத்தியில் பிரதானமானவை. காபுலி குஸ்தி என்பதாகவும் ஒன்றுண்டு.

ஏறத்தாழ இருபத்தைந்து வருடங்களாக வர்மப் பிடிச் சண்டைகளையும் கம்பு தேக்கிச் சண்டைகளையும் இதர இந்திய, ஆங்கில முறைச் சண்டைகளையும் கற்றுக் கொடுத்து எண்ணற்ற வீரர்களை உருவாக்கியுள்ள மதுரை, ஆரப்பாளையம் ஜூடோ சண்டை ஆசிரியர், ஒரு மில் தொழிலாளியுங்கூட. மதுரை ஹார்வி மில்லில் இவர் வேலை பார்த்து வருகிறார்.





படங்கள் :

1. பரிசு வழங்குபவர் மதுரை நகரசபைத் தலைவர் திரு எஸ். முத்து, எம்.எல்.ஸி. அவர்கள். பரிசினைப் பெறுபவர் மதுரை எம். ஆர். கணபதி.
2. கராத்தி.
3. கம்பு தேக்கிச் சண்டை.
4. கராத்தியில் ஒரு வகை.









1. ஜூடோ.

2, 3. கராத்தி.

4. கட்ட செங்கல்லை இரண்டாக வெட்டிப் பிளக்கும் சிம்மம் முனுசாமி.

அன்று அநாகரிகமாகக் கருதப்பட்டு வந்த இந்த ஜூடோ, கராத்தி முறைகள் திரைப் படங்களில் புகுத்தப்பட்டதும் பலரும் இன்று அதை நாகரிகச் சண்டைகளாக மதித்துக் கற்றுக் கொள்ள ஆவலுடன் முன்வருவதாக ஆசிரியர் பெருமையாகக்குறிப்பிடுகிறார்.

கடந்த 25–5–1969ல் மதுரை சித்திரைப் பொருட்காட்சியில் சிசர்ஸ் கம்பெனியார் இவருடைய ஜூடோ, கராத்தி சண்டைகளைப் பொதுமக்கள் பார்த்து ரசிக்கும்படி செய்தனர்.

மீண்டும் அதே பொருட்காட்சியில் 15–6–69ல் மதுரை ஆரப்பாளையம் ஜூடோ சங்கத்தினர் பல பயங்கரமான சண்டைகளை மெய் சிலிர்க்கும் விதமாகப் போட்டுக் காட்டினார்கள். ஆசிரியரும் – ஜூடோ சங்கத் தலைவரும் நேரடியாக மோதிச் செய்த சண்டை படுபயங்கரமானது; பார்க்கக் கவர்ச்சியானது.

அன்று எல்லாரின் கவனத்தையும் கவர்ந்த விளையாட்டு, கணபதியிடம் பயின்ற மாணவர் 'மதுரை சிம்மம்' முனுசாமி, இடக்கையில் பெரிய கட்ட செங்கலைத் தாங்கி வலக் கையை அரிவாள் போன்று வைத்து ஒரே வெட்டில் செங்கல்லை இரண்டாகப் பிளந்ததே! இப்படி மளமளவென்று இடக்கை–வலக்கை என மாறி மாறி அரை டஜன் செங்கற்களை வெட்டி எறிந்த விதம் எல்லாரையும் வியக்கச் செய்தது!

மாணவர்கள் மட்டுமின்றி அரசாங்க உத்தியோகஸ்தர்களும், தொழிலதிபர்களும் கம்பெனி ஊழியர்களும் கூட இவரிடம் பயிற்சி பெறுகிறார்கள்.

ஆசிரியர் கணபதி கூறுகிறார்:

''இந்தச் சண்டைகளைப் பள்ளிச் சிறுவர் சிறுமியர் முதல் கல்லூரிப் பெண்கள் – வாலிபர்கள் வரை அனைவரும் கற்றுக்கொள்ளுவது மிக மிக நல்லது. குறிப்பாகப் பெண்கள் சமுதாயத்துக்கு இது அவசியத் தேவை. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இந்தச் சண்டைகளைக் கற்றுக் கொடுக்க எங்கள் சங்கம் தயாராக இருக்கிறது. இதை ஆதரிப்பது அரசின் கடமை. தேர்ந்த ஆசிரியர்களைக் கொண்டு கற்றுக் கொடுத்தால் அதனால் விளையும் நன்மைகள் கொஞ்சமன்று. நாட்டில் கோழைத்தனமும், பலவீனமும் ஒழியும்.

''ஆங்கிலப் படங்களில் அமையும் இயல்பான சண்டைகள் மாதிரி, தமிழ்ப் படங்களில் பெரும்பாலும் அமைவதில்லை. இந்தக் குறைபாடுகளைப் பாமர ஜனங்கள் அறிய நியாயமில்லை. இன்னும் நல்ல முறையில் தமிழ்ப் படங்களில் பொருத்தமாக, நம்பும்படியாக, இயற்கையாக இந்தச் சண்டைகள் அமைய வேண்டும்.''

நடுத்தர உயரமும் மாநிறமும் கட்டுக் கோப்பான உடல் அமைப்பும் கொண்ட ஆசிரியர், மதுரை எம். ஆர். கணபதி எண்ணற்ற வீரர்களை உருவாக்கித் தந்திருக்கிறார்!

பேட்டி: ப. மு. இளங்குமரன்

## பாருங்கள்...வித்தியாசத்தை!

# வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது டினோபால்




விளைவுகளே கூறுகின்றன! துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்க்கவும். பிறகு பாருங்கள், சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது என்று! சட்டை, புடவை, படுக்கை விரிப்பு, டவல் எல்லாமேதான்!

இத்தனைக்கும் ஆகும் செலவு, துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவு! டினோபால் வாங்குங்கள். ரெகுலர் பாக், எகானமி பாக் மற்றும் ஒரு வாளித் துணிக்கு ஒரு பாக்கெட் ஆகிய மூன்று அளவுகளில் கிடைக்கிறது.




® டினோபால் என்ற பெயர் ஜே.ஆர். கெய்கி எஸ்.ஏ. பாஸ்ல் ஸ்விட்சர்லாந்து நிறுவனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த.பெ. 11050, பம்பாய்-20 BR.

Shilpi SGT-1A/69 Tam

கண்டிப்பான அஸ்திவாரத்தின்மீது
அறிவுக் கற்களை அடுக்கி
எழுப்பப்பட்டது இந்த......

# அன்புக்கு ஓர் ஆலயம்!

**1942**ம் ஆண்டு. சென்னை நகரில் உள்ள ஒரு பெண்கள் பள்ளி மாணவிகளில் சிலர், தங்கள் சுதந்திர உணர்ச்சியை வெளிக் காண்பிக்க விரும்பினார்கள்.

தலைமை ஆசிரியையிடம் போய் இதற்கான அனுமதியைக் கேட்க அவர்களுக்குப் பயம். அப்படியே கேட்டாலும் அந்த அனுமதி கிடைக்காது என்று அவர்களே முடிவு கட்டி விட்டார்கள். ஆகையால் வந்தது வரட்டுமென்று கொடி பிடித்து ஊர்வலம் நடத்தச் சில மாணவிகள் துணிந்துவிட்டார்கள்.

இந்த விஷயம் தெரியாத தலைமை ஆசிரியை ஊரிலுள்ள பரபரப்பான சூழ்நிலையில் தன் மாணவிகளின் பத்திரத்தை உத்தேசித்து, வகுப்புகள் ஆரம்பிக்கும் நேரத்தில் பள்ளி வாசல் கேட்டைச் சாத்திப் பூட்டச் செய்து விட்டார்.

மாணவிகள் குழாம் சாத்தப்பட்ட கேட்டைப் பார்த்து ஒரு கணம்தான் திகைத்து நின்றது. பிறகு மடமடவென்று அந்த மரக் கேட்டின் சட்டங்களில் கால்களை வைத்து ஏறி மறுபக்கம் இறங்க ஆரம்பித்தார்கள்.

இந்த நிகழ்ச்சியைத் தம் அறையிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த தலைமை ஆசிரியை திடுக்கிட்டார். அப்போதுதான் அவருக்கு அந்த மாணவிகளின் நோக்கம் புரிந்தது. உடனே பள்ளிச் சேவகனைக் கூப்பிட்டு, வாசல் கேட்டைத் திறந்து விடச் சொன்னார். அதோடு நிற்கவில்லை. அவனையும், அவன் சகாக்கள் சிலரையும் அந்த மாணவிகள் குழாத்துக்குப் பின்னால் அவர்களுக்குப் பாதுகாப்பாக, ஆனால் அந்த மாணவிகளுக்குத் தெரியாத மாதிரி போகும்படியும் உத்தரவிட்டார்.

சற்று நேரத்துக்குப் பின் மாணவிகள் பள்ளிக்குத் திரும்பினார்கள். தலைமை ஆசிரியை தங்களுடைய செய்கைக்காகக் கடுமையாகக் கண்டிக்கப் போகிறார் என்று அந்த மாணவிகள் அஞ்சி, முகம் குனிந்த நேரத்தில் அந்த அம்மையார், "என்கிட்டே முன்னாலே ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதா? கதவைச் சாத்தச் சொல்லி யிருக்க மாட்டேனே? அந்த மரச் சட்டம் முறிந்து உங்களுக்குக் காயம் பட்டிருந்தால் உங்கள் பெற்றோருக்கு நான் என்ன பதில் சொல்லி யிருக்க முடியும்?" என்றுதான் கேட்டார்!

இந்த நிகழ்ச்சியைத் தொடர்ந்து இருபத்தி ஏழு ஆண்டு காலம் எத்தனையோ ஆயிரம் ஆயிரம் மாணவிகள் அந்த அன்புச் சிகரத்தின் அரவணைப்பில் வளர்ந்திருக்கிறார்கள்.

அந்தப் பள்ளி, சென்னை தியாகராயநகரிலுள்ள ஸ்ரீ சாரதா வித்தியாலயா மகளிர் பள்ளி. அந்த அறிவாலயத்தை அன்பு ஆலயமாகவும் மாற்றியவர், தலைமை ஆசிரியை ஸ்ரீமதி ஸி. சுப்புலட்சுமி அவர்கள்.

அவருக்கு அசாதாரண ஞாபக சக்தி என்று அவருடன் பழகுபவர்கள் கூறுவதில் பொருள் இருக்கிறது. அந்தப் பள்ளியில் படிக்கும் சுமார் இரண்டாயிரத்து இருநூறு மாணவிகளையும் அவருக்கு நன்கு தெரியும். ஒரு மாணவியின் வீட்டில் ஏதாவது சுப காரியம் என்றால் இவரை அங்கே பார்க்கலாம். ஒரு மாணவிக்கு உடல் நலம் சரியில்லை என்றால் உடனே அந்த மாணவியை நேரில் பார்த்து ஆறுதல் சொல்லி வருவார். இவர் உடல் நலமே சமீபத்தில் வெகுவாகப் பாதிக்கப்பட்டு, 'ஆபரேஷன்' செய்ய வேண்டிய நிலையும் ஏற்பட்டது. இவருடைய உறவினர்களுக்குத் தகவல் அனுப்ப ஏற்பாடான போது, இவர் தம்முடைய சக ஆசிரியைகள் தம்மைக் கவனித்துக் கொண்டாலே போதும்



படம்: அரவணைத்த கரத்துக்கு வளையல் பரிசு.




1. ஆஸ்திரேலியாவுக்கும் இந்தியாவுக்குமிடையே தில்லியில் நிகழ்ந்த மூன்றாவது டெஸ்ட் பந்தயத்தில், ஆஸ்திரேலியாவின் இரண்டாவது இன்னிங்ஸைத் தொடங்கி ஆடிய லாரி இறுதிவரை ஆட்டமிழக்காமல் இருந்தார். இவ்விதம் ஓர் இன்னிங்ஸைத் தொடங்கி இறுதிவரை 'அவுட்' ஆகாமலிருந்த வேறு ஆட்டக்காரர்கள் யார் ?

2. (அ) எந்த ஆட்டக்காரர் தாம் விளையாடிய முதல் டெஸ்ட் பந்தயத்தின் முதல் இன்னிங்ஸில் இரண்டு சதம் எடுத்தார் ? (ஆ) கடைசியாகத் தாம் விளையாடிய டெஸ்ட் பந்தயத்தில், கடைசி இன்னிங்ஸில் இரு சதம் எடுத்த பாட்ஸ்மன் யார் ?

3. இதுவரை பல்வேறு நாடுகளுக்கிடையே நிகழ்ந்துள்ள 660 டெஸ்ட் பந்தயங்களுள், ஓர் இன்னிங்ஸைத் தொடங்கி ஆடிய இரு ஆட்டக்காரர்களும் தலா இருநூறு ரன்களுக்குமேல் எடுத்தது எப்போது ? அந்த ஆட்டக்காரர்கள் யார் ?

4. இரு ஆட்டக்காரர்கள் சேர்ந்து ஆடி ஜோடி பிரியாமல் எடுத்துக் குவித்த உயர்ந்த பட்ச ரன்கள் எவ்வளவு ? அந்த ஆட்டக்காரர்கள் யார் ?

---

## விடைகள் :

1. இப்பெருமைக்குரியவர் வேறு இருவரே.

(அ) ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த பில் பிரௌன். 1938-இல் இங்கிலாந்துக்கு எதிராக லார்ட்ஸ் மைதானத்தில் நிகழ்ந்த இரண்டாவது டெஸ்ட் பந்தயத்தில் இவர் 206 ரன்கள் எடுத்தார்--ஆட்டமிழக்காமல்.

(ஆ) இங்கிலாந்து ஆட்டக்காரர் லென் ஹட்டன். 1950இல் ஓவல் மைதானத்தில் நிகழ்ந்த நான்காவது டெஸ்ட் பந்தயத்தில் இவர் 202 ரன்கள் எடுத்தும் ஆட்டமிழக்கவில்லை.

2. (அ) இங்கிலாந்தைச் சேர்ந்த ஆர். இ. ஃபாஸ்டர். ஆஸ்திரேலிய கோஷ்டிக்கு எதிராக 1903-04இல் இங்கிலாந்து கோஷ்டியில் இடம் பெற்று இவர் விளையாடிய முதல் டெஸ்ட் பந்தயத்தின் முதல் இன்னிங்ஸில் இவர் 283 ரன்கள் எடுத்தார்.

(ஆ) மேற்கு இந்திய கோஷ்டியைச் சேர்ந்த ஸேமூர் நர்ஸ், நியூஸிலாந்துக்கு எதிராக இவர் விளையாடிய கடைசி டெஸ்ட் பந்தயத்தின் இரண்டாவது இன்னிங்ஸில் இவர் எடுத்த ரன்கள் 258.

3. 1964-65இல் மேற்கு இந்திய கோஷ்டிக்கும் ஆஸ்திரேலியாவுக்குமிடையே பார்படாஸில் நிகழ்ந்த டெஸ்ட் பந்தயத்தில் லாரி, ஸிம்ப்ஸன் இருவரும் ஆடத்தொடங்கி முறையே 210, 201 ரன்கள் எடுத்தனர். ( இருவரும் ஜோடி பிரியாமல் எடுத்த மொத்த ரன்கள் 382)

4. 1934இல் ஓவல் மைதானத்தில் இங்கிலாந்துக்கு எதிராக விளையாடிய பிராட்மன் (244), பான்ஸ்ஃபோர்ட் (266) இருவரும் ஜோடி பிரியாமல் ஆடி எடுத்த மொத்த ரன்கள் 451. - ரா. பா.

என்று சொல்லி விட்டார். சக ஆசிரியைகள் மீது இவருக்கு அத்தனை ஈடுபாடு.

கண்டிக்க வேண்டிய கட்டங்களில் கண்டிக்கவும் தயங்க மாட்டார். ஆனால் அதில் அதிகார தோரணை இராது. வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுவது போல் சொல்லித் திருத்துவார். ''என்னம்மா! இது கல்யாண வீடில்லையே! இங்கே இவ்வளவு தடபுடலாக ஆடை அணிந்து வரவேண்டுமா, என்ன?'' என்று சுட்டிக் காட்டுவார். ''நீ அடுப்பு ஊதுறதுன்னு தீர்மானித்து விட்டாய்! அதைக் கொஞ்சம் அறிவோடுதான் ஊதேன்'' என்று குறைந்த மார்க்குகள் வாங்கும் மாணவியைக் கடிந்து கொள்வார்.

ஆந்திரப் பிரதேசத்தில் செல்வந்தக் குடும்பத்தில் பிறந்த இவர், தமிழகத்தின் தலைநகரில் கல்விச் சேவை செய்ய வந்ததற்குக் காரணம் சகோதரி ஆர். எஸ். சுப்புலட்சுமி அம்மையார்தான். மாணவிகளோடு மாணவியாக இன்றும் இந்தப் பள்ளியின் விடுதியில் தான் தங்கி யிருக்கிறார்.

தலைமை ஆசிரியையாக இருந்து ஓய்வு பெற்ற இவரைப் பள்ளி நிர்வாகிகள் சும்மா விடுவதாயில்லை. கரஸ்பாண்டண்டு பொறுப்பைச் சுமத்தினர். இந்த ஸ்தானத்தை வகிக்க அவர் சம்மதம் அளித்ததன் பேரில் அவரைப் பாராட்டப் பள்ளி நிர்வாகிகள் ஒரு விழாவுக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள்.

விரலால் சுட்டிக் காட்டி வழி காண்பித்த அவருக்குப் பள்ளி மாணவிகள் வைர மோதிரம் ஒன்றை அணிவித்தார்கள். அன்புடன் அரவணைத்த கரங்களை மதிக்கும் வகையில் பழைய பள்ளி மாணவிகள் தங்க வளையல்கள் போட்டார்கள். பள்ளி மாணவிகளின் தாயார்கள் ஒன்றுகக் கூடிக் கூஜா, பிளாஸ்க், தண்ணீர்ப் பாத்திரம் மூன்றையும் வழங்கினார்கள். சக ஆசிரியைகள் அவருக்குப் பட்டுப் புடவையும், பக்த மீரா உருவச் சிலையும் கொடுத்தார்கள். இவைகளை அன்புடன் ஏற்றுக் கொண்ட ஸ்ரீமதி சுப்புலட்சுமி நிதியாக வசூலித்துக் கொடுக்கப்பட்ட ஐயாயிரத்து ஒரு ரூபாயைக் குழந்தைகளுக்கு இன்னொரு வகுப்பு அறை கட்ட வழங்கிவிட்டார். பள்ளி இன்னும் விஸ்தரிக்கப்பட வேண்டும் என்ற சிந்தனையிலேயே மூழ்கிக் கிடப்பவராயிற்றே.

ஆறும் வகுப்பிலிருந்து பதினோராம் வகுப்பு வரை ஒவ்வொரு வகுப்பிலிருந்தும் ஒவ்வொரு மாணவி முன் வந்து ஓய்வு பெற்ற தலைமை ஆசிரியைக்கு அஞ்சலி செலுத்தினள். ஆறும் வகுப்பில் சிறுமியாக விளங்கும் மாணவி பதினோராம் வகுப்பில் அகத்திலும் புறத்திலும் எத்தனை பரிணமம் பெற்று விடுகிறுள் என்பதைப் புரிய வைத்தது இந்த நிகழ்ச்சி.

உடலில் பலம் குறைந்தாலும் உள்ளத்தில் மிகுந்த வலிமை உள்ள திருமதி சுப்புலட்சுமி சாரதா வித்தியாலயத்தின் 'ஞான ஒளி' என்று இன்றையத் தலைமை ஆசிரியை திருமதி ஜெயலட்சுமி அம்மாள் உணர்ச்சி பரவசத்துடன் கூறுகிறுர். — **கோமதி சுவாமிநாதன்**

## உங்களுக்கே... பருவ மங்கையின் பைந்தளிர் மேனியெழில்.

இளமை கொஞ்சிப் புதுமெருகு மினிரும் எழிலுக்கே... ஜெய் அழகு சோப்! சரும நெகிழ்ச்-சிக்கான எண்ணெய்கள் கொழித்திட, ஆழ ஊடுருவிச் சுத்த மிடும் அதன் மென்மை நுரை உங்கள் சருமத்திற்கு நேயமானது. வில்லை உள்ளளவும் எல்லை மீறிய செழிப்புடன் கமழும் அதன் மல்லிகை மணம் உங்களைக் கொள்ளைகொள்ளும். மறவாதீர்கள், நவீனமான உலோக ஜிகினுத் தாளுறை தரித்தது ஜெய் ஒன்றுதான்.

ஜெய்–நீங்கள் நினைப்பதை விடக் குறைவான விலை உள்ள அதி விசேஷ அழகுசாதன சோப்!

உங்கள் எழில் பெருக

# ஜெய்

அழகு சோப்

உங்கள் மனங்கவர் மணங்கமழ்வது.




**டாடா**
**தயாரிப்பு**

*Benson 1142 Tam*




சென்னையில் அரும்பாக்கம் எங்கே இருக்கிறது என்று ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன்பு யாராவது கேட்டிருந்தால் பெரும்பாலோரிடமிருந்து 'தெரியாது' என்றுதான் மறுமொழி கிடைத்திருக்கும். இன்று அதே கேள்வியை யாரிடம் கேட்டாலும், 'வைஷ்ணவக் கல்லூரி இருக்கிறதே அந்த இடம் தான் அரும்பாக்கம்' என்று உடனடியாகப் பதில் வரும். பூந்தமல்லி சாலையை யொட்டி விரிந்து பரந்து கிடந்த பூமியிலே 1964 — 65ல் தொடங்கப் பெற்றது துவாரகாதாஸ் கோவர்த்தனதாஸ் வைஷ்ணவக் கல்லூரி. காந்தி நூற்றுண்டு விழாவினை யொட்டிச் சிரமதானம் செய்து இக்கல்லூரியின் ஒருபுறத்தில் மேடும் பள்ளமுமாக, புதர்கள் அடர்ந்து கிடந்த இடத்தில் ஒரு பூங்கா அமைத்துள்ளனர் மாணவர்கள். எழுபத்தைந்து வயது நிரம்பிய பிரமசாரியான பழம் பெரும் தேசபக்தர் திரு சங்கர் ராவ் தேவ் இப்பூங்காவைத் திறந்து வைத்து அதன் இயற்கை அமைப்பையும் மாணவர்களின் அரும் பணியையும் வெகுவாகப் பாராட்டினார்.

'வைஷ்ணவ ஜனதோ' பாடலுடன் தொடங்கிய கூட்டத்தில் இறுதிவரை நிலவிய அமைதி வியப்பூட்டியது. மாணவர்கள் நிரம்பிய கூட்டத்தில் இவ்வளவு அமைதியா? உணர்ச்சி ததும்ப, ஆங்கிலத்தில் அழகாகச் சொற்பொழிவாற்றிய திரு தேவ், 'ஆக்டிவ் பாலிடிக்ஸ்' (**Active Politics**) பற்றிக் குறிப்பிடுகையில் 'பாஸிவ் பாலிடிக்ஸ்' (**Passive Politics**) என்று ஒன்று உண்டா?' என்று கேட்டு மாணவர்களையும் ஆசிரியர்களையும் சிரிப்பில் ஆழ்த்தியதுடன் சிந்தனையையும் தூண்டினார். ''இருபது ஆண்டுகளுக்குப் பிறகு 'பாபு'வின் குரலையே கேட்பது போலிருந்தது — தேவ் அவர்களின் ஒளிவு மறைவு இல்லாத அறிவுரை'' என்று கல்லூரி முதல்வர் திரு எஸ். ஆர். கோவிந்தராஜன் குறிப்பிட்டது பொருத்தமே.

இவ்விழாவினை யொட்டி, 'லயன்ஸ் கிளப்' இந்தக் கல்லூரிக்கு நன்கொடையாக வழங்கிய காந்திய இலக்கிய நூல் நிலையத்தைத் திறந்து வைத்த திரு திரவியம் தம் பேச்சினிடையே குறிப்பிட்டார்: ''திரு சங்கர் ராவ் தேவ் தலைமை வகிக்கும் ஒரு கூட்டத்தில் நான் இன்று கலந்து கொண்டு சொற்பொழிவாற்றப் போகிறேன் என்று என் பதினெட்டு வயது மகளிடம் சொன்னபோது, அவள், ''யார் இந்தச் சங்கர்ராவ் தேவ்? பட்டோடியை விடப் பெரியவரா அவர்?'' என்று கேட்டாள். சமீபத்தில் நான் வானொலியில் நிகழ்த்திய மாணவர்களுக்கான வினா — விடை (**Quiz**) நிகழ்ச்சியில் 'முதன் முதலாகப் பாரதத்தில் அமைக்கப் பெற்ற இடைக்கால சர்க்காரின் (**Interim Government**) முதன் மந்திரி யார்?' என்ற கேள்விக்கு 'வ. உ. சி.' என்று பதில் வந்தது! பழம் பெரும் தேசபக்தர்களைப் பற்றிய விவரங்கள் வரலாற்று நூல்களில் இடம் பெறவில்லை. 'எட்டாவது ஹென்றி மன்னனுக்கு எத்தனை பெண்டாட்டிகள்?' என்பன போன்ற வரலாறுகளே சரித்திரப் பாட நூல்களில் இன்றும் இடம் பெறுவதால் ஏற்படும் விளைவு இது.''

'பூங்கா அமைக்கும் திட்டம் எப்படி உருவாகியது?' என்று கல்லூரி முதல்வரிடம் கேட்டதில், அவர் அருகிலிருந்த இரு மாணவர்களைச் சுட்டிக் காட்டி, ''இவர் ஏ. எஸ். வைத்தியநாதன்; பி.எஸ்.ஸி. படிக்கிறார். இதோ இவர் ஜி. முருகேசன். பி. ஏ. இரண்டாம் ஆண்டு படிக்கிறார். இந்தத் திட்டத்தை முன் நின்று நடத்திய இவர்களிடமே கேளுங்களேன்!'' என்றார்.

திரு வைத்தியநாதன் கூறினார்: ''பூங்கா அமைக்கும் திட்டத்தை முதல்வர் கூறினார். அதை மாணவர்களாகிய நாங்களே எங்கள் உடல் உழைப்பினால் உருவாக்கினோம். கல்லூரியின் சமூகப் பணி மன்ற உறுப்பினர்களாகிய மாணவர்கள் திங்கள், வெள்ளி ஆகிய இரு நாட்களிலும் தங்கள் உடல் உழைப்பை நல்கினர். சுமார் இருபது நாட்கள் இதற்கென உழைத்தோம்.''

திரு முருகேசன் விளக்கினார்: ''இப்போது பூங்கா உருவாகியுள்ள இடம் முன்பு புதர்கள் அடங்கிய இடமாக இருந்தது. ஓரிரு பெரிய புற்றுக்கள் இருந்தன. பாம்புகள் இருக்குமோ என்று பயமாக இருந்தது. ஆனால் புற்றுக்களைத் தகர்த்தபிறகு நிறைய தேள்கள் மட்டுமே வெளிப்பட்டன.''

திரு வைத்தியநாதன்: ''கல்லூரியிலிருந்து பூங்காவரை சுமார் ஒரு பர்லாங் தூரத்துக்குப் பாதை அமைத்ததும் மாணவர்களே. (படம்) கற்கள் போட்டுக் கெட்டித்துக் கல் உருளை உருட்டிச் சமன் செய்து மேலே மணல்

தூய்மையது உட்பட எல்லாம் மாணவர்களின் சிரம தானமே.''

திரு முருகேசன்: ''பூங்காவின் நடுவே ஓர் அல்லிக் குளம் அமைக்க விரும்புகிறோம். காந்தியடிகளின் சிலை ஒன்றும் வைக்க உத்தேசம். காந்தி நூற்றாண்டு விழாவையொட்டி ரூ. 3700 நன்கொடை வசூலித்திருக்கிறோம். மாணவர்களே கணிசமான தொகை வழங்கியுள்ளனர். பெரும் பகுதி வைத்தியநாதனின் முயற்சியால் வசூலிக்கப்பட்டது. அரவிந்த மேதா என்ற ஒரு மாணவர் முன்பு இக் கல்லூரியில் படித்தார். அவர் ஒரு விபத்துக்குள்ளாகி அகால மரணமடைந்தார். அந்த இளைஞரின் ஞாபகார்த்தமாக அவரது தகப்பனார் ரூ. 1000 நன்கொடை வழங்கியுள்ளார்.''

''இத் தொகையை எப்படிப் பயன்படுத்தப் போகிறீர்கள்?''

''தகுதியுள்ள மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம், இலவச உணவு, உடை வழங்கலாம் என எண்ணியிருக்கிறோம். ஹாஸ்டல், காண்டீன் இவற்றை யெல்லாம் நிர்வகிக்கும் பொறுப்பை மாணவர்களிடமே ஒப்படைத்துள்ளார் முதல்வர். காண்டீனை மேற்பார்வையிடுவதால் பிற்பகலில் எங்களுக்கு இலவசமாக ஒரு கப் காப்பி வழங்கப்படுகிறது. ஆனால் நாங்கள் அந்தக் காப்பியை அருந்தாமல், அதை விற்றுவிட்டு, தினமும் ரூபாய் இரண்டு மிச்சம் பிடித்து அதை ஏழை மாணவர்களின் சிற்றுண்டிக்காக நன்கொடையாக வழங்குகிறோம்'' என்றார் திரு வைத்தியநாதன்.

அநாவசிய அரசியலில் இறங்காமல் உருப்படியான காரியங்களைச் செய்வதிலும் சுத்தம் ஒழுக்கம், கட்டுப்பாடு இவற்றைக் காப்பதிலும் வைணவக் கல்லூரி மாணவர்கள் அக்கறை காட்டுவது எதை உணர்த்துகிறது? நம் இளைஞர்களிடம் உற்சாகம் பொங்கித் ததும்புகிறது; அவர்களிடம் உள்ள அந்த அதிகப்படி சக்தியை நல்ல வழியில் திருப்பி விட்டால் நாட்டுக்கு நல்லது என்பதைத் தானே!

— பாணன்

74 நாட்கள் உண்ணாவிரதம் இருந்து அண்மையில் காலமான 85 வயது சீக்கியத் தலைவர் தர்சன் சிங் பெருமான் தான் உலகத்திலேயே அதிக நாட்கள் உண்ணாவிரதம் இருந்தவர். இதற்கு முன் 1920-இல் அயர்லாந்தில் 'மாக்ஸ்வினி' என்ற தேச பக்தர், தம்மைச் சிறையிலடைத்த பிரிட்டிஷ் ஆட்சிக்கு எதிராக 72 நாட்கள் உண்ணாவிரதம் இருந்தார்! அதன் பின் அவர் உணர்விழந்தார். சிறை அதிகாரிகள் பலாத்காரமாகத் தமக்கு உணவு கொடுத்ததை அறிந்து ஆத்திரமடைந்து மறுபடியும் உண்ணாவிரதம் இருந்து நான்கு நாட்களில் காலமானார்.

- ஆழி



## பஞ்சரான லாரி!

''ஆட்டத்தை மூன்று நாட்களில் முடித்து விட்டு மீன் பிடிக்கப் போகேன்'' என்று டில்லி வரவேற்பில் மார்தட்டிக் கொண்டார் ஆஸ்திரேலியக் கிரிக்கெட் கோஷ்டியின் காப்டன், லாரி. மூன்றரை நாட்களில் மாட்ச் முடிந்தது, வாஸ்தவம். ஆனால் அவர் எதிர்பார்த்தபடி இல்லையே? டில்லி 'ரம்ளைப்' குழுவினர் 'Lawry Punctured' என்று எழுதிப் பஞ்சரான ஒரு லாரியின் படத்தைப் போட்டுப் பெரிதாக மாட்டியிருந்தது வேடிக்கையாயிருந்தது.

□

சீக்கிய இளைஞர் பிஷன்சிங் பேதியின் பௌலிங் ஓர் அபார சாதனையாகும். அவர் பந்து வீசிய போதெல்லாம் சீக்கிய இளைஞர்கள் 'நல்ல அதிருஷ்டம் உண்டாகுக' என்னும் பொருளுடைய மந்திரத்தை உரக்க ஒருசேரக் கத்தி மைதானத்தைக் கலகலக்க வைத்தனர்.

□

வேங்கடராகவனின் சாதனையும் அபாரமானது. மால்லெட் அடித்த பந்தைத் தில்லி மண்ணில் உருண்டு புரண்டு அவர் பிடித்த இடது கை 'காட்ச்' ஒன்றிற்காகவே பாம்பே டையிங் கம்பெனி ஓராயிரம் ரூபாய் பரிசு கொடுத்திருக்கிறது!

— என். ராஜாமணி



பட்டாடி, பிரஸன்னா, பேதி



# சாருலதா

**கி.ராஜேந்திரன்**

## அத்தியாயம் 14

## சட்டமும் தர்மமும்

மணியின் ஈமச்சடங்குகள் நடக்கும் போது அந்த வீட்டுக்கு வந்திருந்த சாருலதா, கறுப்பு நிற ஜார்ஜெட் சேலையும் டுபை டுவில் கறுப்புச் சோளியும் அணிந்திருந்தாள். துயரகரமான அந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப அவள் உடுத்தியிருந்தாலும் அதிலும் எழிலின் ஏற்றத்தை வந்திருந்தவர்களால் காணுமல் இருக்க முடியவில்லை.

நன்கு இருட்டிய பிறகு சந்திரோதயமானல்தானே நிலாவின் அழகு பளிச்சிடுகிறது? காகிதத்தின் வெண்மை கறுப்பு மையால் அதில் அச்சிட்ட பிறகு தானே தெற்றெனத் தெரிகிறது? — இப்படிப் பலவாருக எண்ண வைத்தது, அவள் தோற்றம்.

சாருலதா கலங்கிப் போயிருந்தாள். அங்கு குழுமியிருந்தவர்கள் மீது அவள் கண்ணேட்டம் செலுத்தினள். அறிமுகமான நபர்கள் எத்தனையோ பேர்கள் இருந்தும் அமைதியின்றி அவள் வேணுகோபாலைத்தான் தேடினுள். 'வேணு இங்கு வருவதற்காக வீட்டை விட்டுக் கிளம்பி விட்டார் என்பதை ஃபோனில் உறுதிப்படுத்திக் கொண்டுதானே நான் புறப்பட்டேன்? எங்கே அவர்?'

கடைசியில் அவன் நிற்குமிடத்தைக் கண்டுபிடித்துக் கொண்டதும் நிம்மதி பெற்றுள் அவள். வேணுவின் கண்களைச் சந்தித்த பிறகு மணியின் மனைவியை அணுகுவதற்கு அவளுக்குத் தைரியமும் தெம்பும் பிறந்தன. இரண்டு நிமிஷங்கள் அவள் அருகே அமர்ந்திருந்து ஆறுதலாக நாலு வார்த்தைகள் கூறிவிட்டு, எழுந்து வேணுகோபாலை நோக்கி வந்தாள் அவள்.

''எதற்காகக் காத்திருந்தார்களாம்?''

''பெங்களூரிலிருந்து இரண்டாவது பிள்ளை இரவோடு இரவாகக் காரில் வந்திருக்கிறுன்; அதுதான் தாமதம்.''

''நீங்கள் இன்னும் கொஞ்ச நேரம் இருப்பீர்களா?''

''நீ எப்போ கிளம்புவாய் என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன், சாரு. என் வண்டி சர்விஸுக்குப் போயிருக்கிறது. நீ வீட்டுக்குப் போகும்போது வழியில் இறங்கிக் கொள்ளலாம் என்று நினைத்தேன்.''

இருவரும் கூட்டத்தினரிடையே மெல்ல வழி ஏற்படுத்திக் கொண்டு நகர்ந்து, சாலையில் சாருலதா காரை நிறுத்தியிருந்த இடத்துக்குப் போனுர்கள்.

கார் புறப்பட்ட சற்று நேரத்துக்கெல்லாம் வேணுகோபால் கூறினுன்: ''ஊட்டியிலே மணி காரை விட்டு இறங்கும்போதே, 'சாரு, லெட் அஸ் நாட் வேஸ்ட் எனி டைம்!' என்று கூவிக்கொண்டே இறங்கினுன். காக்டெய்ல் பார்ட்டியை ஆரம்பிக்க அத்தனை அவசரம்! அப்போதே இன்னும் மூன்று மாதங்கள்தான் என்று கெடு வைத்தேன். இரண்டு வாரங்கள் முன்னுடியே நடந்து விட்டது.''

''பாவம்!'' என்றுள் சாருலதா.

''பாவமாவது புண்ணியமாவது? வலிய மரணத்தை வரவழைத்துக்கொள்கிறவர்களுக்கு அனுதாபம் என்ன வேண்டிக் கிடக்கிறது? 'லிவர் ரொம்பக் கெட்டுப் போயிருக்கிறது; குடிப்பதை நிறுத்து; அதுதான் மருந்து' என்றேன். 'அதெப்படி முடியும்?' என்று கேட்டு இன்னெரு டாக்டரை வரவழைத்தான். டாக்டர் மாறினுலும் மருந்து மாறுமா? மடையன்!''

''செத்துப் போனவரை ஏன் திட்டுகிறீர்கள்?''

''அதுவும் சரிதான்; அவன் உயிரோடு இருக்கும்போது குடிக்கத் தூண்டியவர்கள் மீதுதான் நியாயமாகக் கோபப்பட வேண்டும். மணியின் மரணத்துக்கு நீயும் பொறுப்பேற்க வேண்டியவள்தானே!''

'' இதென்ன அசட்டுத்தனமான பேச்சு? அவரிடம் பர்மிட் இருந்தது; பணம் இருந்தது; அலமாரி நிறைய விஸ்கி இருந்தது. அவர் ஊட்டியில் என்னுடன் தங்கியிருந்தபோது மட்டும் தானா குடித்தார்? தினமும்தான் குடித்தார். எப்படி இருந்தாலும் சாகப் போகிறேன்; நன்றாகக் குடித்துவிட்டுத் தான் சாகிறேனே என்பது அவர் சித்தாந்தம்.''

''அவருடைய லிவர் கெட்டுப் போயிருக்கிறது என்பது தெரிந்தும் நீ அவரை ஊட்டிக்கு அழைத்துப் போனதும் மது வழங்கியதும் மகா பாவம்!''

''வேணு! ஏற்கனவே குணா வீட்டை விட்டுப் போய்விட்டதால் என் மனசு ரொம்ப நொந்து போய்க் கிடக்கிறது. நீங்கள் வேறு அதை மேலும் புண்ணாக்காதீர்கள்!''

''குணா வீட்டை விட்டுப் போய் விட்டானா? ஏன்? எங்கே?''

''எங்கே என்றுதான் தெரியவில்லை. நேற்று சாயங்காலம் அவனுக்குக் கல்யாணம் பேசிவிட்டு வரப் போனேன். ராமலிங்கம் ரொம்ப சந்தோஷமாகச் சம்மதம் தெரிவித்தார். வீட்டுக்கு வந்து இவனிடம் விஷயத்தைச் சொன்னதும் தன் மானம் கப்பலேறி விட்டது என்று குதித்தான். அந்தச் சமயம் பார்த்து மணி காலமான செய்தியைச் சாரங்கன் ஃபோன் செய்தாரா? எனக்கு ஒன்றுமே ஓடவில்லை. காலையில் டிபனுக்கு வந்து உட்கார்ந்தபோது குணாவைக் காணோம். ராத்திரியே



பெட்டி படுக்கையோடு அவன் கிளம்பி விட்டதாக முத்து சொன்னான்.''

''ஆக, தம்பியை வீட்டை விட்டுத் துரத்தி விட்டாய்!''

''இன்று உங்களுக்கு என்ன வந்து விட்டது? மணி செத்துப் போனால் அதற்கு நான்தான் காரணம்; குணு வீட்டை விட்டு வெளியேறினால் அதற் கும் நான்தான் பொறுப்பு. அவரவர் களுக்கு வயசாகவில்லே? எல்லோரு டைய தலை விதியையும் நிர்ணயிக்க நான் என்ன கடவுளா?''

''நீ எப்படிக் கடவுளாக முடியும்? கடவுள் தர்மத்துக்குப் பயந்தவர்!''

''அவர் 1969ம் ஆண்டு இந்தியாவில் வாழ்ந்து பார்க்க வேண்டும். இன்று இங்கு யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்கிறவன் முட்டாள்!''

''அயோக்கியத்தனம் வளர அனு சரணையாகத்தான் இன்று சட்ட திட் டங்களும் கட்டுப்பாடுகளும் இருக்கின் றன, ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனாலும்.....''

''வருஷக் கணக்கில் வருமான வரி கட்டாமலும், கணக்குக் கொடுக்கா மலும் அதற்கு அபராதம் செலுத்தா மலும் இருக்கும் மந்திரி ஒருவர் தொடர்ந்து பதவியில் நீடிக்க முடிகிற






# "தூய்மை பளிச்சிட என் வீட்டைத் துலங்க வைப்பது விம் ஒன்றே"

என்கிறார் திருமதி வினிதா கோரே, செம்பூர், பம்பாய்.

"தேய்ப்பதற்கான மலிவு சாதனங்களை விற்க என் வீட்டு வாசற்படிக்கே வந்துவிடுகிறார்கள் சிலர்." என்கிறார் திருமதி கோரே, "நான் நம்பி உபயோகிப்பதோ நுரைவளமோங்கும் விம். சில நொடிகளிலே வீட்டைப் பளிச்சிடச் செய்கிறது. உங்களுக்கும் கண்டிப்பாகத் தேவை நுரைவளமோங்கும் விம். துப்புரவாக்குவதிலே அதிக ஆற்றல்...பேசின், தொட்டி, பீங்கான் பாண்டங்கள், பாத்திரங்கள், கண்ணாடிப் பாண்டங்கள் தரை எதனையும் இமைப் பொழுதில் மின்னச் செய்திடும். ஆம், பளிச்சென வேகமாகத் துப்புரவாக்குவதிலே மேம்பட்டது நுரைவளமோங்கும் விம். ஓங்கிய ஒளிபெறவே...வாங்குவீர் விம்.

**பாங்கான இல்லங்களிலே...விம், பளிச்சிடும் இல்லங்களிலே...விம்**

லின்டாஸ்–V.21-149 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

காலம் இது. அவரிடம் போய்த் தர்மத்தைப் பற்றிப் பேசுங்கள்!''

''அரசன் எவ்வழி அவ்வழி மக்கள்!''

''கரெக்ட்! இன்று இன்கம்டாக்ஸ் ஆபீஸில் வந்து ஸ்டூலில் உட்காருகிற பியூன் தினத்தந்தி படிக்கிறவன். மந்திரிக்கு இருபதாயிரம், ஆபீஸருக்கு இரண்டாயிரம், ஹெட் கிளார்க்குக்கு இருநூறு என்றால், எனக்கேன் இரண்டு ரூபாய் தரக் கூடாது? என்று விகிதாசாரக் கணக்குப் போடுகிறான் அவன்!''

''அந்த இரண்டு ரூபாயையும் தன் குழந்தைக்குப் பால் வாங்கிக் கொடுக்க அவன் பயன்படுத்துவதில்லை. ஸபயர் தியேட்டருக்கு டாக்ஸியில் போய் இறங்கத்தான் செலவழிக்கிறான்!''

''நீங்கள் ஒருத்தர் வேணுமானால், வருகிற கால் ரூபாய், அரை ரூபாய்க் காசுகளுக்குக் கூடக் கணக்கு எழுதி வைக்கலாம். மற்றபடி எத்தனை வக்கீல்களும் டாக்டர்களும் ஒழுங்காக ரசீது தருகிறார்கள்? நேர்மையுடன் வரிகளைக் கட்டுகிறார்கள்?''

''கடன் இழவே என்று வரிகளைப் பைசா பாக்கி இல்லாமல் செலுத்துகிறவன் மாதச் சம்பளம் வாங்குகிறவன்தான் சாரு. அவனும் ஏமாற்ற வாய்ப்புக் கிடைக்காத வரையில்தான் நாணயஸ்தன்!''

''தெரிந்திருக்கிறதே உங்களுக்கு!''

''அதெல்லாம் புரியாமலில்லை. வால் அறுந்த நரி கதையாக நீ ஏன் நடந்து கொள்ள வேண்டும் என்பதுதான் என் கேள்வி. எல்லாரும் தப்புப் பண்ணுகிறார்கள் என்பதற்காக நீயும் குற்றங்கள் புரிய வேண்டுமா?''

''நான் என்ன செய்து விட்டேன்? சட்டத்தை மீறி நான் என்றுமே எதையுமே செய்தது கிடையாது. என்மீது யாரும் எந்த விதமான குற்றமும் சுமத்த முடியாது!''

''அது எனக்குத் தெரியும் சாரு! சட்டத்தை நீ உடைக்க மாட்டாய். ஆனால் சட்டத்தின் கண்களில் மண்ணைத் தூவி அதன் பிடியிலிருந்து நழுவும் வழிகள் அத்துபடியாகி யிருக்கின்றன உனக்கு.''

சாரு சிரித்தாள். ''ஒரு வேடிக்கையைக் கேளுங்கள்! நான் போன மாசம் டில்லிக்குப் போயிருந்தேனே?...''

''ஆமாம், தொழில் வர்த்தகத் துறையில் தில்லிக்குப் போகாமல் என்ன காரியம்தான் நடக்கும்? பர்மிட் கிடைத்ததல்லவா?''

''கிடைத்த கதையைத்தான் சொல்கிறேன். டில்லியில் 'லியேஸன்' வேலைகளைக் கவனிக்க என் 'ரெப்ரஸென்டேடிவ்' கோபி இருக்கிறார். அவர் என்னைக் கிளப்புக்குச் சீட்டாட அழைத்துப் போனார். நான் ஜெயிக்கக் கூடாது. தோற்கத்தான் வேண்டும் என்று முன் கூட்டியே எச்சரித்து விட்டார்! முதலில் எனக்குப் புரியவில்லை. அப்புறம் பார்த்தால் நாங்கள் ஆடியது இரண்டு ஆபீசர்களுடன்! தொடர்ந்து நாலு நாட்கள் கஷ்டப்பட்டு நாலாயிரம் தோற்ற பிறகு பர்மிட் கிடைத்தது!''

''ஆமாம். லஞ்சம் கொடுத்தால் தானே குற்றம்? சீட்டாட்டத்தில் தோற்பது நாகரிகம்!''

''தலைவர்கள் பலர் ஐம்பதாவது பிறந்த நாளைக்கு ஐம்பது லட்சம், ஐம்பத்திரண்டாவது பிறந்த நாளைக்கு ஐம்பத்திரண்டு லட்சம் என்றெல்லாம் இலக்கு வைத்து நன்கொடை வசூலிக்கிறார்களே, எதற்குத் தெரியுமா?''

''அத்தனை வசூலாகிறதோ இல்லையோ, கையில் இருக்கும் பத்துப் பதினைந்து லட்சம் கறுப்புப் பணத்தை வெளுப்பாக்க அது உதவும் என்பதால் தான். இதே காரணத்தினால்தான் குதிரைப் பந்தயத்திலும் லாட்டரியிலும் ஜெயித்த டிக்கட்டுகளுக்குப் பரிசுப் பணத்தை விடக் கூடுதலாகவே சில சமயங்களில் கிடைக்கிறது.''

''சட்டத்தை ஏய்க்க ஒன்றா இரண்டா? நூற்றுக் கணக்கான வழிகள்!''

''அதனால்தான் சொல்லுகிறேன்; 'சாரு சட்டத்துக்குட்பட்டு நடந்தால் போதாது. தர்மத்துக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்' என்று. காந்திஜியே சட்டத்தை மீறியிருக்கிறார், பல தடவைகளில். ஆனால் அவர் தர்மத்தை மீறியதில்லை. சட்டத்தை விடத் தர்மத்தையே மேலானதாக மதித்தார்.''

''தர்ம ரட்சாமணியே! உங்கள் வீடு நெருங்கிக் கொண்டிருக்கிறது. இறங்கத் தயாராகுங்கள்!''

''ஸ்விஸ் பாங்கில் நெம்பர் அக்கௌண்ட் வைத்துக் கொண்டு சட்டத்தை ஏய்க்கலாம், சாரு. சட்டத்தைக் காக்க அதிகாரிகளும் போலீசும் தான் உண்டு. ஆனால் தர்மத்தைக் காப்பது மனச்சாட்சி. அதை ஏமாற்ற முடியாது. இன்று அது பணிந்து போகும்; நாளை பழி வாங்கி விடும்!''

''தொழில் வர்த்தக முன்னேற்றம் என்ற பெரிய லட்சியத்துக்கு முன்னால் லஞ்சம் கொடுப்பதும் ரகசிய அக்கௌண்டும் சின்ன விஷயங்கள். இந்த அற்பச் செயல்களில் நான் ஈடுபடாமல் போனால் இவ்வளவு சீக்கிரத்தில் இந்த அளவுக்கு முன்னேறியிருக்க முடியாது!''

''கொஞ்சம் நிதானமாகத்தான் அந்த முன்னேற்றம் நடக்கட்டுமே! என்ன கெட்டு விடும்?''

''என் தவறுகளை அலசிப் பார்ப்பவர் என் சாதனைகளைக் கவனிக்காமல் கண்ணை மூடிக் கொள்கிறீர்கள். எத்தனை பேர்களுக்கு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தந்திருக்கிறேன்! நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு எந்த அளவுக்கு உதவியிருக்கிறேன்!''

''இந்த அற்பச் செயல்களில் ஈடுபடாமலேயே இந்த அளவுக்கு முன்னேறும் திறமை உனக்கு இருக்கிறது என்பதுதான் என் வாதம். லட்சியம் உயர்வாக இருந்தால் போதாது; அதை அடையும் வழியும் நல்லதாக இருக்க வேண்டும் என்று காந்திஜி வற்புறுத்தவில்லையா?''

''நீங்கள் எதற்கு எதற்கெடுத்தாலும் காந்திஜி பெயரை இழுக்கிறீர்கள்?''

''நீ எதற்குக் காந்திஜியின் பெயரைக் கேட்டு மிரள்கிறாய்?''

''அவர் அவதார புருஷர். அவரைப் போல் எல்லோராலும் நடந்து கொள்ள முடியுமா?''

''பாபம் புரியும் பலவீனர்கள் சொல்லும் சமாதானம் இதுதான்! நொண்டிச் சாக்கு, பேடித்தனம்! முயன்று பார்த்தால் முடியாதது கிடையாது.''

''ஆணுக்குப் பெண் சமம் என்பதெல்லாம் வாயளவோடுதான். தவறிப் போய்ப் பெண்ணொருத்தி முன்னுக்கு வந்து விட்டால் ஆயிரம் குற்றம் குறைகளை அவளைப் பற்றிச் சொல்வீர்கள்.'' கார் நின்றது. வேணு கோபால் இறங்கவில்லை.

''வீட்டிலே பெண்களைப் பூட்டி வைக்கும் காலம் மலையேறிவிட்டது என்பதை யார்தான் புரிந்து கொள்ளவில்லை? நாட்டின் பிரதம மந்திரியே பெண்தானே! தொழில் வர்த்தகத் துறையில் உன் முன்னேற்றம் பெண் இனத்துக்கே பெருமைதான் சாரு.'':

''ஆனால் லஞ்சம் தருவது மட்டும் ஆணின் ஏகபோக உரிமை — காப்பிரைட் என்கிறீர்கள்!''

''இல்லை சாரு! திருடர் கூட்டத்துக்குக் கூடப் பெண்ணொருத்தி தலைவியாக இருந்து அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள். எனக்குப் பெண் குலத்தைப் பற்றிய கவலை அப்புறம். முதல் கவலை சாருவைப் பற்றித்தான்.''

''ரொம்ப நன்றி; வீடு வந்துவிட்டது; கார் நின்றுவிட்டது!''

''இதோ கதவைத் திறந்து விடுகிறேன்'' என்ற வேணுகோபால், சொன்னபடி செய்தான். ஒரு காலைத் தரையில் ஊன்றியவன் தயங்கித் திரும்பி, கோபமாக இருந்த சாருலதாவைக் கனிவுடன் பார்த்தான். ''சாரு! உன்னைக் குறைவாகப் பேசினேன் என்று நினைக்காதே! உன் பெருமைகளை உணராதவன் இல்லை நான். நீ பழகுகிற மனிதர்கள்; வளைய வருகிற சூழ்நிலை எல்லாம் பயங்கரமானவை. உன் சிநேகிதர்கள் எல்லாரும் மது அருந்துபவர்கள்; ஆனால் நீ ஒரு சொட்டுக்கூட ருசி பார்த்தது கிடையாது. கேவலமான, ஒழுக்கம் கெட்ட மனிதர்கள் பலருடன் நீ தொடர்பு கொள்ள நேர்ந்தாலும் மதி இழக்காமல் மனோதிடத்துடன் இருந்து தும்பைப் பூப் போல உன் தூய்மையைக் காப்பாற்றிக் கொண்டு வருகிறாய். காட்டுக்குப்போய்த் தவமிருப்பது சுலபம். ஆனால் நீ கடைப்பிடிப்பது தவ வாழ்க்கையை விடக் கடினமான ஒரு யோக நிலை!''

''தாங்க்ஸ் வேணு! கசப்பு மருந்தை விழுங்கச் செய்து விட்டு நாக்கில் சர்க்கரையும் தடவி விட்டீர்கள்!''

''மருந்து என்று ஏற்றுக் கொண்டால் சரி.''

''ஆனால் என் உடம்பு அந்த மருந்துக்கு 'இம்யூன்' ஆகிவிட்டது, டாக்டர்! மருந்தினால் பலன் இருக்காது. நான் மேற்கொள்ளுகிற எந்தக் காரியத்தையுமே — கீழ்த்தரமான செயலைக் கூட விரும்பித்தான் செய்கிறேன்.

1934ம் ஆண்டு.
அப்போது அவர் வயது 23



# ஆனந்தமாக ஓய்வு பெறுவதற்கு வழி செய்து கொண்டார் அவர்

அப்பொழுதுதான் வாழ்க்கையைத் தொடங்கியிருந்தார். தன் திறமையிலும், எதிர்காலத்திலும் அளவற்ற நம்பிக்கை கொண்டிருந்த பருவம்... குழந்தைகளின் படிப்புச்செலவு, பெண்ணின் திருமணச்செலவு முதலிய தவிர்க்க முடியாத செலவுகளைச் சமாளிப்பதற்கென திட்டமிட்டுச் சேமிக்க ஆரம்பித்தார். அவர் கெட்டிக்காரர். எனவே, ஆயுள் இன்சூரன்சில் முதலீடு செய்தார். தான் இல்லாமல் போனாலும், தனக்குப் பிறகு குடும்பத்திற்கு பொருளாதாரப் பாதுகாப்பை நிச்சயமாக அளிக்கக் கூடியது ஆயுள் இன்சூரன்சுதான் என்பதை நன்கு உணர்ந்திருந்தார் அவர். ஆயுள் இன்சூரன்சு அளிக்கும் ஆதரவிற்கு ஈடேது, இணையேது? நம்மால் நிம்மதியாக ஓய்வு பெற முடியுமா அல்லது 'ஏனோ-தானோ' என்று காலத்தை எப்படியாவது தள்ளவேண்டியிருக்குமா என்ற கவலையை விடுங்கள்! இன்சூர் செய்து கொண்டு, நிம்மதியாக இருங்கள். இன்றே உங்கள் எல்.ஐ.சி. முகவரை (ஏஜெண்டை) பாருங்கள். நீங்களும், உங்களுடைய மனைவிமக்களும், நிம்மதிமிக்க, பாதுகாப்பான எதிர்காலத்தைப் பெற உதவக்கூடிய பாலிசிகளைத்தேர்ந்தெடுக்க பெருமகிழ்ச்சியுடன் உதவுவார் அவர்.



**ஆயுள் இன்சூரன்சு போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை.**



விழுப்புரம் பிரபல வியாபாரியும், நிலச்சுவான்தாருமான திரு கே.எஸ். சிவராமன் அவர்களின் புதல்வி குமாரி கே. எஸ். உமாமகேஸ்வரியின் பரதநாட்டிய அரங்கேற்றம் 12-11-69 புதன்கிழமை அன்று மைலம் ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி சன்னிதானத்தில் தவத்திரு ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

என் ஒரே குறிக்கோள் மேலே மேலே உயர்ந்து கொண்டே யிருப்பதுதான். அதற்கு அனுகூலமானவற்றை நான் செய்யத் தயார்!''

''சாரு, உனக்கு இருக்கும் ஒரே நண்பன் என்று என்னைக் குறிப்பிட்டாய். அதனால் இவ்வளவு தூரம் பேசுகிறேன். உன் அறிவிடம் நான் வாதாடவில்லை; மனத்திடம் மன்றாடுகிறேன்!''

சாரு வேறு புறம் திரும்பிக்கொண்டாள். ''வாதத்தில் வெல்ல முடியாவிட்டால் காலைப் பிடிப்பதுதான் அடுத்த கட்டம்'' என்று அவள் வாய் முணுமுணுத்தது.

''உனக்குப் பிடிக்காததையும் நான் பேசுவதால் என் நட்பு உண்மையானது என்று புரிந்து கொண்டிருக்கிறாய். என் சிநேகத்தை இழந்து விடவும் நீ விரும்பவில்லை. ஏன்? நீ பெண் என்பதுதான் காரணம். பெண் ஒருத்தியால் கொடியாகத்தான் இயங்க முடியும். நிமிர்ந்து நிற்கப் பலத்தைக் கொம்பிடம் பெறுவது கொடியின் இயல்பு. நீயும் என்னைச் சார்ந்திருக்கும் லதாதானே, சாருலதாதானே?''

''பெயரை வைத்துச் சிலேடையாகப் பேசிவிட்டால் ஆயிற்றா? என் முன்னேற்றத்துக்குக் காரணம் என் அறிவு, திறமை. நீங்களல்ல!''

''அறிவை நான் கொடுப்பதாகச் சொல்லவில்லையே? தெம்பை அளிப்பதாகச் சொன்னேன். நல்லதோ கெட்டதோ எதைச் செய்யவும் பெண்ணுக்குப் பக்க பலம் தேவை. உனக்கு அந்த உள்ளார்ந்த சக்தியைக் கொடுப்பவன் நான். அதனால்தான் நீ சில தவறுகள் செய்யும்போது அவற்றுக்கு நானும் உடந்தையாக இருப்பதாக எனக்குப் படுகிறது. இதை நான் நீடிக்க விட முடியாது, சாரு!''

வேணுகோபால் கீழே இறங்கிக் கதவைச் சாத்தியதும் ''நன்றாக யோசித்துப் பார் சாரு'' என்றான். அவனுடைய இந்தக் கடைசி வேண்டுகோள் கார் உறுமிக் கிளம்பிய சத்தத்தில் அமுங்கிப் போயிற்று.

என்றாலும் சாருலதா யோசிக்காமல் இருக்கவில்லை. 'ஊட்டியில் வேணு என்னைப் பிரிந்து போனதும் நான் ஏன் அழுதேன்? துக்கம் விசாரிக்கப் போன இடத்தில் முதலில் வேணு எங்கே இருக்கிறார் என்று எதற்காகத் தேடினேன்? பக்க பலத்துக்காகவா?' என்று அவள் மனம் எண்ணிப் பார்க்க ஆரம்பித்தது.

(தொடரும்)

---






● ஒரு பாட்ஸ்மன் மற்றொருவரிடம் கேட்டார்: ''ஏனப்பா, இப்படி இடிந்து போய் உட்கார்ந்திருக்கிறாய்?''

மற்றொருவர் சொன்னார்: ம், கேவலம் தொண்ணூற்றொன்பது ரன்களில் ''செஞ்சுரி''யைத் தவற விட்டுவிட்டேன்!

● ''ஆமாம், அந்த ஆட்டக்காரருக்கு மாலையைப் போட்டு விட்டு ஏதோ பேசிக்கொண்டிருந்தாயே, என்ன பேசினாய்?''

''மாலையின் விலை இரண்டு ரூபாயைக்கேட்டுக்கொண்டிருந்தேன்.''

● ''நான் 'செஞ்சுரி' போட்டு விட்டேன். தெரியுமா?''

''தெரியாதே, எப்படி?''

''நூறாவது முறையாக 'டக்' அடித்திருக்கிறேன்!''

● ''லங்கா''க்குச் சற்றுமுன்னால் ''கமென்டேட்டர்'' கூறியது: பந்தை, அடித்து விட்டார்... மேற்குப் புறமாக பௌண்டரியைத் தாண்டி ''எம்'' ஸ்டாண்டுக்குப் போய் விட்டது. அங்கே ஒருவர் இலையை விரித்துக் கொண்டிருக்கிறார்... ஆஹா...... புளியோதரை.... அதில் முந்திரிப் பருப்பு போடப்பட்டிருக்கிறது... தோற்றம் 'ரேஷன் அரிசி' அல்ல என்பதைத் தெளிவாக்குகிறது....





● ஓர் ஆட்டக்காரர் பலவிதமாக அவுட் ஆகியும் அம்பயர் ''அவுட்' கொடுக்கவில்லை. எதிர்க் கட்சி காப்டன் அம்பயரை அணுகி, 'இவரை அவுட்டாக்க வேறு வழிகள் உங்களுக்கு ஏதாவது தெரிந்தால் சொல்லுங்கள்' என்றார். 'யாரப்பா அவன் தூக்கத்தைக் கெடுப்பவன்?' என்று சீறினார் அம்பயர்!

● ''ஆட்டத்தில் இதெல்லாம் சகஜம். வெற்றி தோல்விகளைக் கண்டு அஞ்சக் கூடாது.''

''அதனால் தான் சொல்கிறேன், நீங்கள் தோற்று விடுங்கள் என்று!''

● ''உன் பையன் கோபு கிரிக்கெட் நன்றாக விளையாடுகிறான் போலிருக்கிறதே?''

''ஆமாம், உனக்கு எப்படித் தெரியும்?''

''கண்ணாடி ஜன்னல்களைப் பார்த்துச் சொல்கிறேன்!''

— கே. வி. முரளி



கார்ன் ப்ராடக்ட்ஸ்
பக்குவமுறைப் போட்டியில்
பங்கு கொண்டு பரிசு பெறுங்கள்!

எங்கள் விசேஷமான

# சாதா கிறிஸ்துமஸ்

(அனுப்பியவர் : திருமதி வசுதா ஆச்சார்யா, " வத்சலா ",




# பேக்கிங் பவுடர்

கொண்டு தயாரிக்கப்பட்டது



கேக்குகள், பிஸ்கோத்துகள், பக்கோடா, பூரி, குலாப்ஜாமுன் ஆகியவற்றை அதி மென்மையாகத் தயாரிக்க உதவுகிறது ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவு உபயோகித்தாலே போதும் ரெக்ஸ் பேகிங் பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப்பட்டது. பேகிங் பவுடர்களில மிகவும் சிறந்தது ரெக்ஸ்.

எல்லா பிரவுன் & போல்ஸன் தயாரிப்புக்களும் (கஸ்டர்டு பவுடர் உள்பட) சைவ உணவுக்குக் குந்தகமற்றது. அவை முட்டை கலவாதவை.



தேர்வு :

# கேக்

கீழ்ப்பாக்கம் கார்டன் ரோடு, சென்னை-10.)

**பக்குவ முறை :**

1½ டீஸ்பூன் ரெக்ஸ் பேகிங் பவுடர்
200 கி. மைதாமாவு
200 கி. உலர்ந்த திராட்சை
100 கி. கருப்புத் திராட்சை
100 கி. பெரிய திராட்சை
50 கி. பாதாம்
50 கி. ஆரஞ்சுத் தோல் வற்றல்
50 கி. கிளாஸே செர்ரி
150 கி. வெண்ணை
150 கி. சர்க்கரை
2 முட்டைகள்
4 டே. ஸ்பூன் பால்
¼ டீஸ்பூன் வாசனை ச்சரக்குகள்

1. ரெக்ஸ் பேக்கிங் பவுடரையும், மைதாவையும் ஒன்றாகச் சலித்துக் கொள்ளுங்கள்.
2. உலர்ந்த திராட்சை, கருப்பு மற்றும் பெரிய திராட்சைகளைச் சுத்தம் செய்யுங்கள்; கருப்புத் திராட்சையின் விதையை அகற்றவும்.
3. பாதாம் மற்றும் ஆரஞ்சுத் தோல் வற்றலை நறுக்கிக் கொள்ளுங்கள்; செர்ரிகளை காலாக நறுக்கி சிறிது மைதாவைத் தூவுங்கள்.
4. சர்க்கரையையும் வெண்ணையையும் மென் விழுதாக்குங்கள்.
5. சிறிதுமாவு சேர்த்து முட்டைகளைக் கடையுங்கள்.
6. ஆரஞ்சுத் தோல், செர்ரி முதலியவற்றைக் கலந்து, மாவுக் கலவையுடன் சேருங்கள்.
7. பாலைச் சேர்த்து, இறுதியில் சற்றே நசுக்கிய திராட்சை, கருப்புத் திராட்சை பெரிய திராட்சை மற்றும் வாசனைப் பொருள்களையும் சேர்க்கவும்.
8. கலவையை நன்கு கிளறி, கேக் டப்பாவில் ஸ்பூன் மூலம் ஊற்றவும். பளபளப்பாக இருக்க, மேலே சிறிது முட்டை வெள்ளைச் செதில்களால் மூடவும்.
9. சுமார் ஒரு மணி நேரம் நடுத் தரமான ஓவன் சூட்டில் கேக்கைச் சுடவும்.
10. குளிர்ந்ததும், பாதாம்விழுதினால் மென்மையாகப் பூசி, பிறகு சாககரைப் பாகையும் தடவவும்.
(விரும்பினால் மேல் அலங்காரமும் செய்யலாம்)

**பக்குவ முறைப் போட்டி**
**கார்ன் ப்ராடக்ட்ஸ் தயாரிக்கும் ஒன்று அல்லது மேற்பட்ட பொருள்களை உபயோகப் படுத்திய உங்களுடைய சொந்தமான பக்குவ முறையை எங்களுக்கு அனுப்புங்கள். ஏற்றுக் கொள்ளப்படுபவை இப் பக்கங்களில் பிரசுரிக்கப்படுவதுடன், ரூ. 150 ரொக்கப் பரிசோடு கவர்ச்சியான வெகுமதியும் பெறுவீர்கள்!**

இலவசம்! புதிய பக்குவ முறை நூல் நெ. 2. இன்றே ஒரு பிரதிக்கு எழுதுங்கள்.

தயவு செய்து எனக்கு ஒரு பக்குவ முறை செட்டை ஆங்கிலம் / இந்தி / வங்காளம் / தமிழ் / தெலுங்கு / மலையாளம் / குஜராத்தி / மராத்தி / கன்னடத்தில் / இலவசமாக அனுப்பி வைக்கவும்.

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:
கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா)பிரைவேட் லிமிடெட்
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)
K-3

இது போல் இன்னும் பலவகையான தின்பண்டங்களைத் தயார் செய்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின் வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.



(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

தினமும் காலையில் தோளில் தொங்கும் டிரான்ஸிஸ்டர் ரேடியோவில் மங்கள இசை முழங்கும் வேளையில் தேவனஞ்சேரியிலிருந்து சைக்கிளில் புறப்பட்டுக் கும்பகோணத்தை நோக்கிச் செல்லும் பீட்டர்ஸனை எல்லாரும் அதிசயத்தோடு பார்த்தார்கள். நாட்கள் செல்லச் செல்ல அது எல்லோருக்கும் பழகிப் போன வழக்கமான காட்சியாகி விட்ட போது பீட்டர்ஸன் அந்தக் கிராமத்துக்கும் அந்தச் சாலைக்கும் மிகவும் பழகிப்போன பரம்பரை பரம்பரையாய் அந்த மண்ணோடு ஒட்டி உயிர் வாழும் எல்லாரையும் போல் ஒருவனாகி விட்டான்.

பீட்டர்ஸன் தங்கியிருந்த சின்னஞ் சிறிய வீட்டைச் சுற்றிலும் நாளின் பெரும் பகுதியும் கர்நாடக இசை காற்றோடு கலந்து இழைந்து கொண்டே இருக்கும். அதனால் காலையில் பேப்பர் கொண்டு போடும் பையன் முதல் மாலையில் பசும் பால் வழங்கும் சௌபாக்கியக் கிழவி வரை யாவரும் 'பாட்டையா!' என்றே அவனுக்குப் புதுப் பெயர் வைத்து விட்டார்கள்.

நான்கே வருடங்கள்!

பீட்டர்ஸனுக்குத் தன் தாய்நாட்டை விட்டுப் புறப்படும்போது தன் லட்சியத்தைப் பூர்த்தி செய்து கொள்ள அது மிகவும் குறைவான காலம் என்றே தோன்றியது.

'கர்நாடக சங்கீதத்துக்குக் கால எல்லையே இல்லை. நான்கு வருடங்கள் இல்லை; நாற்பது



வருஷ காலத்துக்குள்ளேயும் அதை அடக்கிவிட முடியாது. அது ஓர் ஆயுட் கால முழுவதும் முயன்று செய்ய வேண்டிய தவம்' என்று சொல்லியிருந்தார் பேராசிரியர் வில்லியம் ஸ்கெல்டன். உண்மைதான் என்று இப்பொழுது புரிந்தது பீட்டர்ஸனுக்கு. ஒரே ஒரு மகா கவியின் சாகித்யங்கள் முழுவதையும் கற்றுக் கொள்ளத் தன் வாழ்நாள் போதாது என்ற உண்மையையும் அந்த




அமெரிக்க இசைக் கலைஞன் புரிந்து கொண்டான்.

ஆனால் அந்த மகா கலைஞர்கள் தங்கள் வாழ்வுக் காலத்துக்குள் இசையின் நுட்பங்களை யெல்லாம் அறிந்து கொண்டு இத்தனை கவிதைகளை — எத்தனை கால மாறுதலும் அழியாத, ராக லட்சணங்களுக்கு இலக்கணமாய் விளங்கும் கவிதைகளை எப்படி இயற்றினார்கள் என்பது அவனுக்கு வியப்பாகவே இருந்தது.

காவிரி ஆற்றில் மீண்டும் ஒரு கோடைக் காலம் மணல் பரப்பாய் ஓடியிருந்தது. மீனுவும் பீட்டர்ஸனும் மாலை வெயிலின் சரிவில் தங்கள் நிழல்கள் முன்னால் நீண்டு செல்ல, பாலத்தின் கீழே புகுந்து கால்கள் புதையப் புதைய நடந்தார்கள். தனக்குப் பிடித்தமான இடம் வந்ததும், ''இப்படியே உட்காரலாமே'' என்றாள் மீனு.

மனத்தில் பழைய எண்ணங்கள் வாழ்க்கைச் சம்பவங்களும், ஆசைகளின் கற்பனை யெழிப்பும், ஏமாற்றங்களின் ஏக்கச் சிதறல்களும் பதித்த அடிச்சுவடுகள் — அவள் பார்வை எட்டிய தூரம் வரை தெரிந்தன.

''இதமான சூழல்'' என்ற பீட்டர்ஸன் ஒரு முறை ஆழ்ந்து சுவாசித்துவிட்டு, ''எங்கள் இசைப் பேராசிரியர் சூழ்நிலையின் அதிசய சக்தியைப் பற்றி அடிக்கடி சொல்லுவார். 'கர்நாடக இசையை நன்கு புரிந்து கொள்ள முதலாவது சூழ்நிலை—இரண்டாவது

வீணை — இவை மிக்க அவசியம்' என்பது அவருடைய அனுபவம். சூழ்நிலையைப் பூரணமாய்ப் பெறவே நான் இது மாதிரிச் சிறிய நகரத்தையும் கிராமத்தையும் தேடி வந்தேன். நீங்களும் இந்தச் சூழ்நிலையை எனக்கு அழகானதாய், பயனுள்ளதாய் மாற்றி உதவினீர்கள். உங்கள் தாயிடம் வீணை கற்றுக் கொண்டது என்னுடைய மிகப் பெரிய பாக்கியம்'' என்று சொன்னான்.

''உங்களுடைய அக்கறையும் பிடிவாதமும் தான் எல்லாவற்றுக்கும் காரணம்'' என்று சொன்ன மீனு எங்கோ தொலைவில் கல்லூரிக் கட்டிடங்களை மூடி மறைத்துக் கொண்டிருந்த மரங்களைப் பார்த்தாள்.

''உங்களுடைய சொந்த விஷயங்களைப் பற்றிக் கேட்பதற்கு என்னை மன்னிக்க வேண்டும்'' என்ற பீட்டர்ஸனின் வார்த்தையைக் கேட்டதும் மீனுவின் பார்வையும் கவனமும் அவசரமாய்த் திரும்பின.

''என்ன?'' அவளுடைய முகத்தில் மஞ்சள் வெய்யில் தங்கத் துகள்களாய்ப் படிந்தது.

''உங்களிடம் கொஞ்ச நாட்களாய் ஒரு கவலையின் நிழல் படிவதைக் காண்கிறேன். நான் அன்று முதன் முதல் பார்த்ததுபோல் இப்பொழுது நீங்கள் இல்லை மிஸ் மீனு! அழகும் கலைத் திறமையும் கொண்ட உங்கள் மலர்ச்சியைக் குறைப்பது எதுவோ?''

எது?

விஜயம் இரண்டு வருஷங்களுக்கு முன்பே கல்யாணமாகி வெளியூருக்குப் போய்விட்டாள். மீனுவின் கல்யாணத்துக்காக அவள் அம்மாவும் தனியாய்த் தவித்துக் கொண்டிருந்தாள். இரண்டு இடங்களிலிருந்து வந்து பெண் பார்த்துவிட்டுப் போனார்கள். ஒருவனுக்கு அவளுடைய அழகு பிடித்திருந்தது. ஆனால் அத்தனை வசதி இல்லை என்று புரிந்ததும் அழகு மாத்திரம் போதாது என்று பேசாமல் இருந்து விட்டான். மற்றவன் அவளுடைய பாட்டையும், வீணை வாசிப்பையும் வெகுவாகப் பாராட்டினான். அவள் அம்மாவும் நம்பிக்கையோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

''மிஸ்டர் பீட்டர்ஸன்...''

அவள் தனக்குள்ளே திரண்டு எழுந்த நீர்த் துளிகளைச் சிரமத்துடன் அணையிட்டுக் கொண்டாள்.

''சொல்லுங்கள் மீனலோசனி!''

''ஒன்றுமில்லை.''

''என்னிடம் சொல்ல முடியாததாய் இருந்தால் வேண்டாம். தயவு செய்து மன்னித்து விடுங்கள்.''

''இல்லை, இல்லை. உங்களிடம் சொல்லத்தான் போகிறேன். ஆனால் இப்பொழுது வேண்டாம். நாளைக்கு—''

இருள் பரவிய பிறகு அவர்கள் இருவரும் எதுவுமே பேசிக்கொள்ளாமல் எழுந்து நடக்கலானார்கள்.

பீட்டர்ஸன் மறுநாள் மீனலோசனி கொடுத்த கடிதத்தைப் படித்துப் பார்த்தான். அழகான கையெழுத்தில் தெளிவான ஆங்கிலத்தில் மீனுதான் அதை எழுதியிருந்தாள்:

''எனக்குக் கல்யாணம் செய்துவிட அம்மா முயற்சிகள் செய்தாள். இன்னமும் செய்து கொண்டிருக்கிறாள். எனக்கு இப்பொழுது இருபத்தேழு வயதாகிறது. இந்த ஊர்க் கணக்குப்படி நான் திருமண வயதை எப்பொழுதோ தாண்டிவிட்டேன். எனக்காக அம்மா தேடிப் பிடித்த ஒருவர் என்னை வந்து பார்த்தார். என் தோற்றம் அவருக்குப் பிடித்திருந்தது. என் இசைத் திறமையைக் கூட அவர் பாராட்டினார். ஒரு வாரம் கழித்து அவரிடமிருந்து கடிதம் வந்தது. உங்களிடம் நான் பேசியதும் பழகியதும் அவர் பார்வையில் குறைவாய் — குற்றமாய் — தோன்றிவிட்டது. எங்கள் தெருவிலேயே இப்பொழுது என்னைப் பற்றி — நம்மிருவரையும் பற்றி — மோசமாய்ப் பேசிக்கொள்கிறார்கள். கீழ்த் திசையின் ஒளிக் கதிர்கள் மேற்கு நோக்கிச் செல்கின்றதாய் எண்ணினேன். அதே சமயம் கிழக்கு இருளில் மூழ்கிப் போகிறது என்பது இப்பொழுது புரிகிறது.''

பீட்டர்ஸன் கடிதத்தை மடித்து வைத்தான்.

ஏன்?

கேள்வி நெஞ்சில் கழித்தது.

மீனுவின் அழகிய முகம் — அந்தக் கவலையின் நிழல் படிந்த முகம் — கேள்விக்குப் பின்னால் சோதிக்கும் பிரச்னையாய்த் தெரிந்தது. ஆத்ம பலம் நிறைந்ததாய் நம்பிய சமூகத்துக்கே ஒரு சரிவாய்த் தோன்றியது.

'ஏன்?'

சங்கரனின் உடல் நிலை இப்பொழுது மிகவும் சிரமமான கட்டத்தை அடைந்து விட்டது. உள்ளூரில் இனிமேல் எதுவும் செய்வதற்கில்லை என்று சொல்லிய டாக்டர் உடனே சென்னைக்குப் போய் ஸ்பெஷலிஸ்ட் டாக்டரிடம் சோதனை செய்து விடுவதுதான் நல்லது என்று தெரிவித்தார்.

மீனலோசனியும் அவள் தாயும் சங்கரனைச் சென்னைக்கு அழைத்துச் சென்றபோது பீட்டர்ஸனும் அவர்களோடு சென்றான். சங்கரனிடம் அவனுக்கும் அவ்வளவு பாசமும் அக்கறையும் இருந்தது.

சங்கரனின் இருதயம் பாதிக்கப்பட்டிருந்தது தெரிந்தது. 'போகப் போக இருதயம் இன்னும் மோசமாகி விடலாம். அப்புறம் அதன் வேலையே நின்று போய்விடும். உயிரைக் காப்பாற்ற ஒரே வழி மாற்று இருதயம் அமைப்பதுதான்' என்று சொன்னார் நிபுணர்.

எல்லோரும் கலங்கிப் போய்விட்ட அந்த நேரத்தில் பீட்டர்ஸன் அந்தப் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொண்டான். அடுத்த மாதம் அவன் தாய்நாடு திரும்பும்போது சங்கரனையும் கூடவே அழைத்துக் கொண்டு போய் அங்கே அவனது இருதய ஆபரேஷனைச் செய்வதற்கான ஏற்பாடுகளைச் செய்வதாய்ச் சொன்னான். மீனுவிடமும் அவளது தாயிடமும் அதற்கு அனுமதியும் பெற்றான்.

சங்கரன் அமெரிக்கா செல்வதற்கான தயாரிப்புக்களில் தீவிரமாக ஈடுபட்டான் பீட்டர்ஸன். பேராசிரியர் ஸ்கெல்டன் முழு மனத்துடன் ஒத்துழைத்தார். இசையைத் தம் உயிராய்ப் போற்றும் ஒரு குடும்பத்

துக்குச் செய்யும் உதவியை அவரது நாட்டின் அரசாங்கமும் உணர்ந்து கைகொடுத்தது.

பிரயாணத்துக்கு இன்னும் ஒரு வாரமே இருந்தது.

அது ஒரு வெள்ளிக் கிழமை மாலை நேரம். சங்கரன் நான்கு நாட்களாகவே புதிய தெம்புடன், உணர்ச்சிப் பெருக்குடன் காணப்பட்டான்.

''இப்படித்தான் தைரியமாக இருக்க வேண்டும், சங்கரன்!'' என்றான் பீட்டர்ஸன்.

சங்கரன் கூடத்துக்கு வந்து உட்கார்ந்து கொண்டான். அவனுள் வேறு ஏதோ ஒரு நினைவு ஓடியது போலும்: அவன் முகம் மேலும் பரவசங் கொண்டது.

''மிஸ்டர் பீட்டர்ஸன்! நீங்களும் மீனுவும் சேர்ந்து கொஞ்ச நேரம் வீணை வாசியுங்கள்'' என்று கேட்டுக் கொண்டான்.

மீனுவின் முகத்தில் கண நேரம் அதிசயம் பரவியது. கூடவே வாழ்வின் புதிய அர்த்தத்தை உணரும் உணர்ச்சி வேகம் அவளை நிலைகொள்ளாமல் செய்து நெஞ்சை அடைத்தது. அவள் விம்மலை அடக்கிக் கொண்டாள். ஆனால் அவளையும் மீறிக் கொண்டு கண்கள் கசிந்தன.

''ஏன் மீனு?''

''ஒன்றுமில்லையே!'' — அவள் வீணையுடன் வந்து அமர்ந்து கொண்டாள்.

சில வினாடிகளில் இரு வீணைகளிலும் பிறந்த கானம் இணைந்து — ஒன்றில் ஒன்று லயித்து ஒன்றிப்போய் — சங்கரனையும் அவன் தாயையும் அங்கே இருந்த உயிர் அற்ற பொருள்களையெல்லாம் கூட அலை அலையாய்ப் பெருகும் தனது நீட்சியில் ஆட்கொண்டு விட்டது.

காலம் கழிந்தது. ஆனால் அதன் ஒவ்வொரு வினாடிகளும் உணர்வு மிக்க அனுபவங்களாய் இதயங்களில் தேங்கின.

கடைசியில் சங்கரன் பீட்டர்ஸனைத் தன் அருகில் அழைத்துக் கைகளைப் பற்றிக் கொண்டான்.

''மிஸ்டர் பீட்டர்ஸன்! உங்களிடம் என் கோரிக்கை ஒன்றைத் தெரிவித்துக்கொள்ளலாமா?''

''கோரிக்கையா?''

''ஆமாம். என் சகோதரியை நீங்களே மணந்து கொண்டு விடுங்களேன்!''

''சங்கரன்!''

''உங்களுக்குத்தான் அவள் பெருமை புரியும். நீங்கள்தான் அவளுக்கு ஏற்றவர். அம்மாவும் மீனுவும் இதை ஒப்புக்கொள்வார்கள். யோசித்துப் பார்த்தால் இந்த ஆத்ம சந்நிதியின் முன்னால் மதம், நாடு, என்கிற வேற்றுமை யெல்லாம் அற்பமானவை.''

மீனுவும் அவள் தாயும் கேட்டுக்கொண்டு அசையாமல் நின்றார்கள்.

பீட்டர்ஸன் தன்னை உணர்ச்சிகளிலிருந்து விடுவித்துக் கொண்டு ''இது என் பாக்கியம். உங்கள் அம்மாவுக்கும் சகோதரிக்கும் இதைப் பற்றிச் சிந்திக்கத் தேவையான அவகாசம் கொடுங்கள்'' என்றான்.

அடுத்த நாள் காலையில் பீட்டர்ஸன் அந்த வீட்டுக்குள் நுழையும்போது, மீனு அழுது அழுது சிவந்த கண்களோடு உட்கார்ந்திருந்தாள். வறட்சியான பார்வையோடு நிமிர்ந்து பார்த்தாள்.

''சங்கரன்... என் தம்பி சங்கரன் போய் விட்டான்.''

''மீனலோசனி!''

''அவன் ஆசை செயலாகவில்லை. கனவாகவே நின்றுவிட்டது. உடம்பு குணமாகி இந்தக் கூடத்தில் அப்பாவுக்குப் பிறகு அவர் ஆசையைத் தன்னுடையதாக ஆக்கிக் கொண்டு இந்தக் கூடத்லை இசையால் நிரப்ப ஆசைப்பட்டான்.''

''........''

''என்னை நீங்கள் புரிந்து கொள்வீர்களா?'' அவசரமாய்க் கேட்டாள் மீனு.

''நிச்சயமாய்.''

''சங்கரனுக்குப் பிறகு நான் அவனுக்குப் பதிலாக என்னைச் சமர்ப்பித்துக் கொள்ளப் போகிறேன்.''

பீட்டர்ஸன் அவளையே சில நிமிஷங்கள் பார்த்துக் கொண்டிருந்தான்.

''மிஸ் மீனு! இதுதான் இந்த மண்ணின் உண்மையான சக்தி. துயரங்கள் தீண்டாத ஆத்ம சக்தி அது. அது உங்களுக்குள்ளேயும் இருக்கிறது. எல்லாப் பிரிவுத் துயரங்களையும் விரைவில் நீங்கள் கடந்துவிடுவீர்கள். நானும் அந்தச் சக்தியின் சிறிய துளியை என்னோடு எடுத்துச் செல்கிறேன்.''

அடுத்த வெள்ளிக் கிழமை.

மீனு கூடத்தில் அமர்ந்திருக்கிறாள்.

மௌனம்.

இன்னும் அந்தக் கூடம் மௌனத்திலிருந்து விடுபடவில்லை.

அவள் கண்கள் மூடியிருந்தன.

விர்ரென்ற இரைச்சல்.

மீனம்பாக்கம் விமான நிலையத்தில் மேற்கு நோக்கிச் செல்லும் பெரிய விமானம் ஒன்று மண்ணை விட்டு மேலெழும்புகிறது. அதன் ஒலி பெருகிப் பெருகிக் கொண்டே போய், பிறகு கொஞ்சம் கொஞ்சமாய்த் தேய்ந்து எல்லையற்ற விண்வெளியில் கலந்து கரைந்து சாதாரணச் செவிகளுக்கு எட்டாத தூரத்துக்குப் போய்விடுகிறது.

தனிமை — மௌனம் — அமைதி.

எல்லாம் அர்த்தம் செறிந்த மொழியாய்த் தோன்றுகிறது. அவளுடைய மெல்லிய சுவாசமே இசை இழையாய் வெளிப்படுகிறது.

நீண்ட நேரத்துக்குப் பிறகு அவள் அந்தப் பிரமிப்பிலிருந்து மீண்டபோது பல வகையான ஒலிகள் வந்து மோதின.

எல்லாவற்றிலும் ஒரு லயம் இருப்பதை அவள் கண்டாள். இதை உணர்ந்துதான் நாத உபாசனையின் மேதைகள், அற்பங்களைக் கடந்து, அழியாததைக் கண்டுகொண்டார்களோ?

ஜீன் பீட்டர்ஸனின் அழகும் பெருந்தன்மையும் நிறைந்த அந்தக் கம்பீரமான தோற்றத்தை ஒரு முறை நினைத்துப் பார்த்தாள் மீனலோசனி. அதிலே சாந்தமும் கனிவும் நிரம்பி யிருப்பதையும் கண்டாள். காலம் அவர்களைப் பிரிக்கவில்லை, தூரம் அவர்களைப் பிரிக்காது. அவர்களின் உள்ளங்கள் தூய்மையோடு ஒரு மகா சந்நிதியில் ஒன்றுபட்டுவிட்டன.

அவள் நெட்டுயிர்க்கவில்லை. ✿

# கலை விளக்கு

## சங்கீத கலாநிதி செம்மங்குடி ரா. ஸ்ரீநிவாச அய்யர்

**க**ருநாடக சங்கீதம் என்றவுடன் இன்று ஸ்ரீ தியாகையர், ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர், ஸ்ரீ சியாம சாஸ்திரிகள் மூவரும் நம் மனக் கண் முன் தோன்றுகின்றனர். அந்தத் திரிமூர்த்திகளுக்கும் சமதையாக இன்னொரு மகானையும் எண்ணி வணங்க வேண்டியது நம் கடமையாகும். ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் அவர்களே அம்மகான்.

''போற்றுதற்குரிய புனிதவான் குலத்தில்'' அவர் பிறந்ததாக மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பாடியிருப்பதற்கேற்ப, நாதயோகி ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்களின் இளைய சோதரராகிய ஸ்ரீ பாலுஸ்வாமி தீக்ஷிதரின் பெண் வயிற்றுப் பேரனாக, சங்கீத மும்மூர்த்திகளும் பிறந்த அதே திருவாரூரில் 1839ம் ஆண்டில் தோன்றினார் ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர். இவரது ஐந்தாவது வயதில், எட்டையபுரம் சம்ஸ்தானத்தில் வித்வானாக இருந்த ஸ்ரீ பாலுஸ்வாமி தீக்ஷிதர் இவரைத் தம்மிடம் அழைத்துப் போய் ஸ்வீகாரம் செய்து கொண்டார்; விலைமதிப்பற்ற ஸ்வீகாரச் சொத்தாகச் சங்கீதத்தையும், வீணைப் பயிற்சியையும், தமிழ்—தெலுங்கு—சம்ஸ்கிருதம் ஆகிய மொழி அறிவையும், சோதிடக் கலையையும் இவருக்கு அளித்தார். ஸ்ரீ வித்யா உபதேசமும் அளித்தார்.

ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் தமக்குப் போதிக்கப்பட்ட கலைகளில் அற்புதமான தேர்ச்சி பெற்றார். சங்கீத சாஸ்திர நுட்பங்களை நன்கறிந்த பிரபல வைணிக வித்வானாகத் திகழலானார். எட்டையபுரத்தின் அரசர்கள் கலைஞர்களின் புரவலர்களாக விளங்கியவர்கள். அவர்களது ஆதரவில் ஆஸ்தான வித்வானாயிருந்த ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரவர்களின் சங்கீத ஞானமும், பாஷா ஞானமும் அபரிமிதமாகப் பரிமளித்தன. எட்டையபுரம் மகாராஜாவின் விருப்பப்படி, தெலுங்கிலுள்ள மகாபாரத பத்ய காவியத்தைத் தமிழில் மொழி பெயர்த்தார். வல்லி பரதம் என்ற தமிழ் நாடகத்திலுள்ள பதங்களுக்கு வர்ண மெட்டுக்களும் அமைத்தார்.



ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர்.

ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் தாமே சிறந்த சங்கீத சாகித்திய கர்த்தருமாவார். சங்கராபரணத்திலுள்ள ''சங்கராசார்யம்'' எனும் கீர்த்தனமும் ''காந்திமதி'' என்ற கல்யாணி கிருதியும் இவரால் இயற்றப் பெற்றவை என்பதிலிருந்தே இவரது உயர்ந்த சங்கீத ஞானத்தையும், மொழி லாகவத்தையும், கவித்துவ சக்தியையும் உணரலாம்.

ஆனால் இவருடைய புகழ் என்றென்றும் நிலைத்திருக்குமாறு செய்வது இவரது ''சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி'' என்ற நூலேயாகும்.

''சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி''யில் ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் எழுபத்திரண்டு மேள ராகங்கள், அவற்றின் ஜன்ய ராகங்கள் ஆகியவற்றின் லட்சணங்களை விளக்கி, அவற்றுக்குரிய லட்சண லட்சிய கீதங்களையும் ஏராளமாக வழங்கியுள்ளார். ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்களின் உருப்படிகளைப் பெருமளவில் கொண்ட இந்நூலில் மற்றும் ஸ்ரீ தியாகையர், சியாம சாஸ்திரிகள், புரந்தரதாஸர், பத்ராசல ராமதாஸர், ஸ்வாதித் திருநாள் முதலிய மற்ற பெரும் வாக்கேயகாரர்களின் கிருதிகளும், தான வர்ணம், பதவர்ணம், தருவர்ணம், பிரபந்தங்கள், ராகமாலிகைகள் ஆகியனவும் கொடுக்கப் பட்டுள்ளன. இன்றைக்குச் சுமார் எழுபது வருஷங்களுக்கு முன்பு — அதாவது, ஸ்வர தாளங்களுக்கு நொடேஷன் போட்டுப் பாடல்களின் வர்ண மெட்டைப் படித்துத் தெரிந்து கொள்ளும் பழக்கம் வெகு அபூர்வமாக இருந்த காலத்திலேயே — ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரவர்கள் ஸ்வர தாள அடையாளங்களுடனும், தசவித கமக விவரங்களுடனும், ஆங்கில முறை நொடேஷனையும் ஆராய்ந்து அவசியம் போலச் சேர்த்து, இப்பாடல்களைப் படித்தே புரிந்து கொள்ளும் வகையில் வெகு விதரணையாக வெளியிட்டிருக்கிறார்.

நமது சங்கீதத்தின் வரலாறு, சங்கீத — சாகித்திய கர்த்தர்கள் 76 பேரின் சரித்திரம் இவற்றையும் கொண்டது இந் நூல்.

சங்கீத சாஸ்திரத்தை என்றென்றும் காத்து வரவும், ராக லட்சணத்தை எதிர்காலத்தவர் அறியவும்

உதவுகின்ற விலைமதிக்க வொண்ணாத பொக்கிஷமாக உள்ளது ''சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி''. நமது கருணாட சங்கீதம் ஸ்தாபிதமாக உயிர் வாழ்ந்து வருவதற்கு ஜீவநாடி ''சங்கீத சம்பிரதாய பிரதர்சினி''யே எனலாம். இந்நூல் உருவாகத் தூண்டுகோலாக இருந்த ஸ்ரீ ஏ. எம். சின்னஸ்வாமி முதலியார் அவர்களையும், இதனை வெளியிட்ட எட்டையபுரம் சம்ஸ்தானத்தினரையும் நன்றியுடன் நினைவு கூரவேண்டும். 1700 பக்கங்களில் இரு பாகங்களாக இந்நூல் 1904ல் வெளி வந்தது. இரண்டாண்டுகளுக்குப்பின் ஸ்ரீ தீக்ஷிதர் இவ்வுலகிலிருந்து மறைந்தார். கர்ணனோடு கொடை போனது போலவும், கம்பனோடு கவிதை போனது போலவும், பார்த்தனோடு வீரம் போனது போலவும், ''அருட் சுப்பராமன் எனும் இணையிலா விற்பன்னனோடு சுவை மிகுந்த பண் வளனும் அகன்றது எனப் பகரலாமே'' என்று இரங்கற்பா பாடி ''கலைவிளக்கே'' என்று ஸ்ரீ தீக்ஷிதரை அழைத்துப் போற்றினார் மகாகவி பாரதியார்.

அன்றைய சூழ்நிலையை ஒட்டித் தெலுங்கு மொழியில் வெளியான சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினியின் தமிழாக்கத்தைச் சங்கீத நாடக அகாடெமியின் உதவியுடன் சென்னை மியூஸிக் அகாடெமியினர் வெளியிட்டு வருகின்றனர். இதுவரை மூன்று பாகங்கள் பிரசுரமாகியுள்ளன.

ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரவர்களுக்கு எல்லா சங்கீத ஸ்தாபனங்களிலும் உருவப் படம் — ஏன், உருவச் சிலையே— வைத்து நன்றியுடன் வழிபட வேண்டும் என்பது என் அவா. இந்த அவாவை என் நண்பர் ஸ்ரீ கல்கி சதாசிவம்—ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி தம்பதியர் அங்கீகரித்து, 'சங்கீத சம்பிரதாயப் பிரதர்சினி'யின் மறுமலர்ச்சிக்குக் காரணமாக உள்ள சென்னை மியூஸிக் அகாடெமிக்கு ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரவர்களின் அருமையான திருஉருவப் படம் ஒன்றை அன்பளிப்பாக வழங்கியுள்ளனர்.* இதன் மூலம் அவர்கள் இசையுலகின் பெரு நன்றிக்குப் பாத்திரமாகியுள்ளனர். இவ்வாண்டு இசை விழாவுக்கு ஒரு சிறப்பம்சமாக, இப்படம் அகாடெமியில் டிசம்பர் 21ந் தேதி திறந்து வைக்கப்படுகிறது.

கலை விளக்காகிய ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர் ஏற்றி வைத்த சங்கீத சம்பிரதாய ஜோதி என்றும் ஒளி குன்றாமல் பிரகாசிக்குமாக!













* இவ்விதழ் அட்டையில் இலங்குவது.




# பயிர்களுக்குப் பாதுகாப்பு... உங்களுக்கு நிச்சய லாபம்

## இவை இரண்டையுமே அளிக்கிறது, எஸ்ஸோவின் புதிய பயிர் பாதுகாப்புத் திட்டம்.

**இப்பொழுது ஒவ்வொரு பயிருக்கும்...தனிப் பட்ட பாதுகாப்புத் திட்டம்.**

உங்கள் பயிர்களைப் பாழடிக்கும் பூச்சிகளையும் நோய்களையும் பற்றிய கவலைகளை இனி விட்டொழியுங்கள். எஸ்ஸோவின் புதிய பயிர் பாது காப்புத் திட்டங்களைக் கையாண்டு லாபமடையுங்கள்! எல்லா வகைப் பூச்சிகளிலிருந்து உங்கள் பயிர்களுக்கு முழுப் பாதுகாப்பும் அளிப்பதற்கென்றே இத் திட்டங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

உங்கள் பயிர், அதாவது நெல், பருத்தி, கரும்பு, நிலக்கடலை, புகையிலை, காய்கறிகள் ஆகிய எதுவானாலும், உங்கள் பயிருக்கு நேரும் தொல்லை எதுவானாலும், அதற்கான பரிகாரம் எஸ்ஸோவிடம் உள்ளது.

நினைவிருக்கட்டும், உங்கள் பயிர்களைப் பாது காக்க எஸ்ஸோ எத்தனையோ பூச்சிக்கொல்லி களை வழங்குகிறது—மலேதியான், லின்டேன், DDT,BHC, தைரதியான், என்டிரின், ஸிரம், ஸிநேப், காப்பர் ஆக்ஸிக்ளோரைடு, எஸ்ஸோ பூசணங்கொல்லி 406 (காப்டான்), கரைக்கும் கந்தகம், இன்னும் எத்தனையோ பூச்சிக்கொல்லி கள் பல்வேறு உருவங்களில், அதாவது தூவக் கூடிய பொடியாகவும், தெளிக்கக்கூடிய திரவமாகவும் கிடைக்கின்றன.

யாவும் உங்களுக்கே...மேலும் பல நலன்களை யும் அளிக்கிறது எஸ்ஸோ! தனது தொழில் நுட்ப செய்திறனையும், முதிர்ந்த அனுபவத் தையும் ஒவ்வொரு கிராமத்திற்கும் கொண்டு செல்கிறது எஸ்ஸோ.

ஒவ்வொரு பயிர் பாதுகாப்புத் திட்டம் பற்றிய விவரங்களையும் உங்கள் எஸ்ஸோ பூச்சிக் கொல்லி வியாபாரியைக் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள், இன்றே!

அல்லது, எங்களுக்கு எழுதி, இலவசப் பிரசுரங்களைப் பெற்றுக் கொள்ளுங்கள்: எழுத வேண்டிய முகவரி:
**எஸ்ஸோ ஸ்டான்டர்டு ஈஸ்டர்ன் இன்க்.**
தபால் பெட்டி 355, பம்பாய் 1. அல்லது தபால் பெட்டி 146, கல்கத்தா 1. அல்லது தபால் பெட்டி 115, சென்னை 1 அல்லது தபால் பெட்டி 235, புது டெல்லி 1.

**எஸ்ஸோ ஸ்டான்டர்டு ஈஸ்டர்ன், இன்க்.**
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடைமையுடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது.)
பம்பாய் . கல்கத்தா . சென்னை . புது டெல்லி

CME-30-TAM




துரோணன்

மூம்பூர் ரயில்வே ஸ்டேஷன் பிளாட்பாரங்கள் அத்தனையிலும் ஒரே நெரிசல். மூன்றும் வகுப்புப் பெட்டியில் ஓர் இடத்தைத் தேடிப் பிடித்து அமருவதற்குள் எனக்குப் பெரும்பாடாகி விட்டது. வண்டி நகரத் தொடங்கி விட்ட அந்தக் கடைசி விநாடியில் ஓட்டமும் நடையுமாக வந்து ஏறிக் கொண்டாள் அவள். ஏறி இறங்கும் பாதையிலுள்ள கூட்டங்களை யெல்லாம் விலக்கிக் கொண்டு, மிகுந்த பிரயாசையுடன் நான் அமர்ந்திருந்த இடத்துக்குச் சமீபமாக அவள் வந்தபோதுதான் அவளை நான் கவனிக்க முடிந்தது.

மவுண்ட் ரோடிலுள்ள புகழ்பெற்ற ஸ்ரீ அண்டு ஆர் கம்பெனியில் நான் ஒரு பிரிவுக்குச் சுருக்கெழுத்துக்காரன். அதாவது ஸ்டெனோ டைபிஸ்ட். அவள்—இதே கம்பெனிக்கு எதிர்ச்சாரியிலுள்ள போஸ்டாபீஸில் ஒரு சுருக்கெழுத்து — இல்லை, சுருக்குச் சொல்லிக்காரி! அதாவது, 'கட்டுக் கட; கடகட கட்' பாஷையின் மூலம் செய்திகளை வெளியேற்றி வைக்கும் டெலிகிராப்பர். எங்கள் கம்பெனி மானேஜருக்கு நானொரு செல்லப் பிள்ளை! அதனால், பிராஞ்சு ஆபீசுகளுக்கு ரகசியத் தந்திகள் அனுப்ப வேண்டிய சந்தர்ப்பங்களிலெல்லாம் நானே நேரிடப் போஸ்டாபீசுக்குப் போக வேண்டி வரும். அப்படி நேரக் கூடிய பாக்கியமான வாய்ப்புக்களால் ஏற்பட்ட பழக்கம்தான், எனக்கும் அவளுக்கும். இப்படி நான் ஒருவன் மட்டும்தான் பாக்கியசாலி என்று சொல்ல முடியாது. போஸ்டாபீசுக்குப் போய் அவளைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்ட ஆண் பெண் எவருக்கும் மறுபடியும் அங்கே போகும் ஆசை ஏற்பட்டே தீரும். எவரிடமும் அவளுக்குப் பேதமில்லை. இன்முகமாக வரவேற்பாள் — பேசுவாள்; வந்த காரியத்தைச் செவ்வனே முடித்து அனுப்பி வைப்பாள்.

எனக்கும் அவளுக்கும் இரண்டு வருஷத்துப் பழக்கம். அவளுககு நான் மனமறிந்து உதவியோ, இடைஞ்சலோ எதுவும் செய்ததில்லை. ஏன்? 'அவள் யார், பெயரென்ன, ஊர் என்ன?' என்றெல்லாம் அநாகரிகமாகக் கேள்விகளைக் கேட்டுத் தலையைச் சொறிந்து கொண்டு நின்றதில்லை.

அந்த நிலைமையில், என் வாழ்வுக்குத் திடீரென ஒரு மாற்றம் ஏற்பட்டது. விசாகப்பட்டினத்தில் உள்ள எங்கள் கிளைக் காரியாலயத்துக்குத் தாற்காலிக மானேஜர் போடவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடவே, எனக்குச் சீட்டு விழுந்தது. அங்கு போய்ச் சேர்ந்தேன். ஒரு வாரத்துக்கு முன்புதான் சென்னைக்குத் திரும்பியிருக்கிறேன். ஆறு மாதங்களுக்குப்பின், இப்போதுதான் இந்த ரயிலில் அவளைச் சந்திக்கிறேன்.

முன்னும் பின்னுமாக நிற்கும் கூட்டம் முண்டியடிக்க, காற்றும் உள்ளே வராத நிலையில், வலது கையில் சுமந்த டிரங்குப் பெட்டியுடன் அவள் நின்று கொண்டிருப்பதைக் கண்ட நான் எழுந்து நின்று அவளைப் பார்த்தபடி, "எங்கே, அந்தப் பெட்டியை இப்படிக் கொடுங்கள்! உங்களுக்கு இடம் இங்கே இருக்கிறது!" என்றேன் உரத்த குரலில். அப்போது தான் அவளது பார்வை முதன் முதலாக என் பக்கத்துக்குத் திரும்பியது.

"ஆ — நீங்களா?" என்றவள் கைப்பெட்டியை மேலே தூக்கி என்னிடம் நீட்டினாள். நான் அதை வாங்கிக் கொண்டு ஒடுங்கி நின்று என் இடத்தைச் சுட்டிக் காட்டினேன். அவள் மேலே தொங்கிய லக்கேஜ் பலகையைப் பிடித்துக் கொண்டு மெதுவாக அணுகி விட்டாள்.

ஆனால் என் செயலைக் கண்டதும், "ஐயா! நீங்கள் உட்காராமலா எனக்கு இடம் தருகிறீர்கள்?" என்று கேட்டாள்.

"பரவாயில்லை, நீங்கள் உட்காருங்கள்!" என்றேன். அவள் முகம் சிவக்க அமர்ந்தாள். நான் கையிலிருந்த பெட்டியை மேல் தட்டில் மிகுந்த சிரமத்துடன் அடக்கினேன்.



''இப்போதும் போஸ்டாபீசில் தானே இருக்கிறீர்கள்?'' என்று கேட்டேன்.

''ஊம்...என் உத்தியோகத்துக்குப் போக்கிடம் ஏது ? உங்களைப் போல் இருந்தால், எங்கே வேண்டுமானாலும் திடீர் மாற்றல் செய்து கொண்டு சொல்லாமல் கொள்ளாமல் போய்ச் சஞ்சாரமிடலாம்!'' என்றான் விஷமத்தனம் முகத்தில் பிரதிபலிக்க.

நான் நிஜமாகவே அதிர்ந்து விட்டேன். 'சொல்லாமல் கொள்ளாமல்' என்றானே. அதன், பொருள்? சிரித்து மழுப்பியபடி, ''ஓ! நான் ஆறு மாதங்களாகச் சென்னையை விட்டுப் போயிருந்தேனே. அதற்காகச் சொல்லுகிறீர்களா ?'' என்றேன்.

அவன் வெடுக்கென, ''ஆமாம்! அதுதான் நல்லவர்களுக்கு அடையாளம்!'' எனக் கூறிவிட்டு முகத்தை வெளிப்புறத்துக்குத் திருப்பிக் கொண்டான்.

''நான் என்ன செய்யட்டும்? எங்கள் மானேஜர் போக்கே அலாதி. முன்பின் தெரிவிக்காமல், திடுதிப்பென்று ஒரு நாள் சாயந்திர வண்டிக்கே விசாகப்பட்டினம் போய் நான் சார்ஜ் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நிர்ப்பந்தித்து விட்டார். பழவினை தோஷம், உங்களிடமெல்லாம் சொல்லிக்கொண்டு போக முடியவில்லையே என்று எனக்கும் வருத்தம்தான்.''




அவன் நீண்டதொரு பெருமூச்சை ஹுங்காரத்துடன் கூட்டி வெளியாக்கியபடி ''நான் உங்கள் ஆபீஸ் கட்டடத்தை மூன்று நாளைக்குச் சுற்றிச் சுற்றி வந்தேன்!'' என்றான் சிறிதே அசட்டுக் களையுடன்.

''அப்படியா? அடப்பாவமே! யாரையாவது விசாரித்தீர்களோ?'' என்றேன் பரிதாப மேலீட்டுடன்.

அவன் வெடுக்கென நகைத்தபடி, ''எப்படி விசாரிப்பது? யாரைக் கண்டு விசாரிப்பது ? உயரமாக, மஞ்சளும் சிவப்புமான நிறத்தில் அழகான கருட்டை மயிர்க் கிராப்புடன்—தந்தி கொடுப்பதற்காக அடிக்கடி எங்கள் போஸ்டாபீசுக்கு வருவாரே, அவர் — என்று அடையாளம் சொல்லி நான் யாரையும் விசாரிக்க முடியவில்லை!'' என்றான்.

நானும் சற்றே வாய்விட்டுச் சிரித்து விட்டேன். ''அப்படியா? ஐ ஆம் ஸாரி — என்ன விசேஷம்?'' என்றேன்.

''அதுவா?'' என்ற அவன் திடீரென எழுந்து நின்று, ''எங்கே, என் பெட்டியைக் கொஞ்சம் எடுக்கிறீர்களா?'' என்றான்.

''ஏன், அது இப்போது எதற்கு? ஏதாவது வாங்க வேண்டுமானால் பணம் நான் தருகிறேன் — அப்புறம் கேட்டு ஞாபகமாக வாங்கிக் கொள்ளுகிறேன்!'' என்றேன்.

அவன் களுக்கெனச் சிரித்தபடி, ''அதற்காக இல்லை; உங்கள் ஒருவருக்குத்தான் சொல்லவில்லை; பத்திரிகை கொடுக்கவும் இல்லை. கல்யாணப் பத்திரிகை ஒன்று....'' எனத் தொடர்ந்தான்.

''அது எதற்கம்மா? சொன்னாலே, போதாதா — அன்புள்ளவர்களுக்கு? உங்களுக்குக் கல்யாணமா?'' என்றேன் மகிழ்ச்சிக் குரலில் பரபரப்பாக.

அவன் அப்படியே திடுக்குற்று நின்று பார்த்தானே, ஒரு பார்வை! ''ஹுக்கும்! எனக்குக் கல்யாணம்!'' எனக் குத்தலாகச் சொல்லி விட்டுத் தன் இடத்தில் அமர்ந்தான்.

''பின்னே யாருக்கு?'' என்றேன் வியப்புடன்.

''என் அக்காவுக்குக் கல்யாணம் — நாளை மறுதினம் திருச்சியில். நேற்றுத்தான் எங்கள் தாத்தா செய்தி அறி

வித்துப் பத்திரிகைகளையும் அனுப்பி வைத்தார். ஆபீஸில் ரொம்ப சிரமப்பட்டு ஒரு வார லீவு வாங்கினேன்—''

'' ஓஹோ ! அக்காவுக்கா கல்யாணம்? மிக்க சந்தோஷம். திருச்சிக்கா போகிறீர்கள்? மாப்பிள்ளை எந்த ஊரோ?'' என்றேன்.

அவன், ''அதெல்லாம் இருக்கட்டும்,...ம் நீங்கள் இப்போது எவ்வளவு தூரம் — எந்த ஊருக்குப் போக வேண்டும் ?'' என்றான் என்னைச் சுட்டிக் காட்டியபடி.

''ஏன், நானும் உங்களுக்குத் துணையாகத் திருச்சிக்கு வருகிறேன். சந்தோஷம்தானே?''

அவன் முகம் திடீரெனப் பிரகாசமாக மலர்ந்தது. எதையோ சொல்ல வாய் எடுத்தவன் ஊங்காரத்துடன் நிறுத்திக் கொண்டு விட்டான்.

வண்டி திண்டிவனத்தில் நின்றது.

''அடேடே! ஹலோ—ஆடுதன் ராஜா! நீதானுடா? நானும் நாலு நாழியாக, நீதானு நீதானுங்கிறதை யோசனை பண்ணிக் கொண்டே நிற்கிறேன். இப்போ உன் குரல் வெளியானதும்தான் நிச்சயப்படுத்தினேன்.'' இவ்வாறு கூறிக் கொண்டே என் தோள் பட்டைக்குக் கீழே ஓங்கித் தட்டியபடி காட்சியளித்தான் மெயில் ராமசாமி. அவன் என் பள்ளித் தோழன். அந்த நாளிலேயே அவனது பேச்சு, செயல் எல்லாம் போட் மெயில் வேகமாச்சே ! இப்போதும் அந்த மெரிட் குறையவில்லை அவனுக்கு.

என் கைகள் இரண்டையும் பிடித்திழுத்து வலுவாகக் குலுக்கியபடி, ''ஏய்! மெனி மெனி கங்குராஜுலேஷன்ஸ் ! எக்ஸலெண்ட் பியூட்டியும் மேட்சாகப் பிடிச்சு விட்டேடா! எப்போடா கல்யாணம் பண்ணிக்கிண்டே — எனக்குக்கூடச் சொல்லாமல்? இப்போ என்ன, ஹனிமூன் போய்க் கொண்டிருக் கையா?'' என்றான் படபடவெனச் சிறிது கூட மூச்சு விடாமல்.

அவனுடைய விசாரணைகளும், முடிவு கட்டல்களும் என்னைப் பெரிய அதிர்ச்சிக்குள் ளாக்கி விட்டன. இப்போது — அவளும் நானுமாக, இரண்டு தலைகளையும் நெருக்கத் தில் பார்த்துக் கொண்டிருக்கிறோமே. அதன் விளைவுதான் அவனை இப்படி ஆட வைத் திருக்கிறது! நான் மிகுந்த பரபரப்பாக, ''ஏய், ஏய் ! கொஞ்சம் நிறுத்திக்கோடா, உன் பாராட்டுக்களை'' எனப் பதறினேன், அவன் அதைச் செவியிலேயே வாங்கிக் கொண்டவனாக இல்லை.

அவனிடம் நான் என்னத்தைச் சொல்லு வேன் ! வண்டி நகர ஆரம்பித்தது. பிறகு வேகமெடுத்து ஓடிற்று.

''சிநேகிதர்கள் என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்?'' என்றான் அவள் குறும்பு மலர்ச்சியுடன்.

''ஐயே, போதுமே ! ராமசாமியைப் போல் அவசரக் குடுக்கை...''

''ஏன், அவர் நினைத்ததிலும், சொன்னதி லும் என்ன தப்பு இருக்கிறது ?'' என்றாள் மிகச் சன்னமான குரலில். இதுவரையில் காணாத புதுமையான சோபை அவள் முகத் துக்கு எப்படி வந்தது ? ஏன் வந்தது ?

''ஹூம்? என்ன... என்ன...?'' என் றேன் பரபரப்பாக. அவள் தலை கவிழ்ந்து விட்டாள் !

'அவளது கேள்வியும் செயலும், என் இத யத்துள் திடீரெனப் பாய்ச்சப்பட்ட புது இரத்தமாக ஒரு புது உணர்வைக் கிளர்ந்தி விட்டன ! என்னைப் பற்றின எவ்வளவு நம் பிக்கையான கருத்துக்களும், இடமும் அவள் மனத்திலே வேரூன்றியிருக்க வேண்டும் ?.... அதுவே எவ்வளவு உறுதியாக முற்றிப் பெருகியிருக்க வேண்டும்? இந்த ராமசாமி நடத்தியிருக்கிற நிமிஷக் கூத்து அவளுடைய கருத்துக்கு அவ்வளவு அநுகூல ஆதரவைத் தந்து விட்டது!'

''ஆமாம், நாளைக்கு உங்கள் அக்காவுக்குக் கல்யாணம் என்றீர்களே, மாப்பிள்ளைக்கு எந்த ஊர், என்ன தொழில் ?''

என்னுடைய இந்தக் கேள்வியும் அவளது கருத்துக்கு அநுகூலமாகி விட்டது! இதுவும் ஒரு விந்தைதான் ! அவள் உதிர்த்த விஸ் தாரச் செய்திகளில் அதிசயமாக எதுவுமில்லை.

சிறு வயதிலேயே பெற்றோரை இழந்து விட்ட பெண்கள் இருவருக்கும் தாய் வழிப் பாட்டனாரும், பாட்டியுமே கார்டியன்கள்.

நாளை நடக்கப் போகிற அவளது அக்கா வின் கல்யாணம் ஒரு காதல் கல்யாணம். அக்காள் ஒரு பி. ஏ. தேறியவள். அவளை நிறையச் செலவு செய்து பெரிய, அந்தஸ் துள்ள சம்பந்தமாகத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும் என்கிற சம்பிரதாயத் தீவிரவாதி பாட்டி. அவ்வாறே, தன் போக் கில் முயற்சி செய்து தேடியும் விட்டாள். அந்தப் பாட்டியை எதிர்த்து, பேத்தியின் காதலை ஆதரித்து ஓர் ஏழைப் பட்டதாரிக்கே அவளைத் திருமணம் செய்து வைக்கத் தீர்மா னித்திருப்பவர் பாட்டனார். இவ்வளவுதான் அவசியப்படும் செய்திகள்.

இச் செய்தியில் பாட்டனாரின் பெருந் தன்மைக்குப் பாராட்டுக் கூறும் தோரணை யில் அவள் எனக்கு அறிவித்திருக்கும் செய்தி என்னவென்றால் தனக்கும் சுயம்வரமாகவே வாழ்வு தரத் தவறாதவர் தன்னுடைய பாட்ட னார் என்பதுதான்!

நாழிகையாக நாழிகையாக உரிமைப்பட்டு வரும் அவளது சொல்லும், செயலும் என்னைத் திணற அடித்தன. என்னைப் பற்றி எவ்வளவு நம்பிக்கைகளும் கனவும் அவள் உள்ளத்தில் ஊன்றி யிருக்கின்றன! இதை இன்னமும் இப்படியே வளர விடுவது சரியா? வளரவிடலாமா? அல்லது...?

நான் திடுக்குற்றுக் கண் விழித்தபோது, சுளீரென்ற கிழக்கு வெய்யில் உறைக்க, வண்டி பொன்மலையைக் கடந்து உச்சிப் பிள்ளை யார் கோவிலின் தோற்றத்தைக் காட்டிக் கொண்டிருந்தது. பத்தேகால் மணி! பரபரப் பாக எழுந்தேன். அவள்—என் முகம் நோக் கிப் புன்னகை புரிந்தபடி அமர்ந்திருந்தாள். அவள் முகத்தில் சிறிதுகூடக் களைப்போ, சோர்வோ இல்லை. நெற்றியிலிருந்த திலகம் கூடச் சிறிதும் கலையவில்லை!

''பாவம், நல்ல தூக்கம் உங்களுக்கு! எங்க தாத்தா கூட ஸ்டேஷனுக்கு வந்திருந்தாலும் வந்திருப்பார். என் அக்காவைக் காட்டிலும்

## கடுமையான சுளுக்கிலிருந்து விரைவில் குணமடைந்தேன்!

# அமிர்தாஞ்சனம்

## மிக உதவியது

அமிர்தாஞ்சனம் சுளுக்கு, ஜலதோஷம், தலைவலி, தசைவலி இவற்றிலிருந்து விரைவில் குணமளிக்கிறது. உபாதை ஏற்பட்டுள்ள இடத்தில் சிறிதளவு அமிர்தாஞ்சனம் தடவி துரித நிவாரணம் பெறுங்கள். 75 வருடங்களாக குடும்பங்களில் பயன்பட்டுவரும் நம்பகமான நிவாரணி அமிர்தாஞ்சனம். எப்போதும் ஒரு பாட்டில் கைவசம் இருக்கட்டும். அது சிக்கனமான ஜாடிகளிலும், கைக்கு அடக்கமான டப்பாக்களிலும் கிடைக்கிறது.




***10 மருந்து பொருள்கள் ஒருங்கே சேர்ந்த அமிர்தாஞ்சனம் வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் ஏற்ற நிவாரணி***

அமிர்தாஞ்சன் லிமிடெட், சென்னை - பம்பாய் - கல்கத்தா - புதுடில்லி - ஹைதராபாத் - பெங்களூர்

AM-5338

என்னிடம்தான் அவருக்குப் பாசம் அதிகம். நீங்கள் பாட்டுக்கு நல்லவருக்கு அடையாளம் சொல்லாமல்...'' எனக் கூறிவிட்டுக் கலகல வென்று நகைத்தாளே அது என் செவிகளை விட்டு மறையாத பதிவு.

பாவம்! இந்தக் கடைசி விநாடியிலும் கூட அவளை ஏமாற்றுவது போல் எப்படிச் சொல்லுவது அல்லது எப்படிச் சொல்லாம லிருப்பது' எனக் கலங்கினேன்.

திருச்சி ஜங்ஷனில் வண்டி நின்றதும், இடித்துப் புடைத்துக் கொண்டு ஏறுவதும் இறங்குவதுமான கூட்ட அமளி என் குறிக் கோளுக்குச் சாதகமாகி விட்டது. அவள் கூறிய நல்லவர்களுக்குள்ள அடையாளத்தைப் பயன்படுத்திக் கொண்டேன்.

பிரயாணிகள் தங்கும் விடுதிக்குள் வந்தேன். முகம், கை கால்களைக் கழுவித் துடைத்துக் கொண்டு பையிலிருந்து புது உடைகளை எடுத்து மாற்றிக் கொண்டேன். வெளிப்புறத்தில் என்னை அழைத்துப் போகப் பலரும் காத்திருப்பார்களே! நிலைக் கண்ணாடியில் தெரிந்த எனது வைதிகக் கோலம் எனக்கே பெரும் வியப்பையும், சிரிப்பையும் அளித்து விட்டது. டிக்கெட்டைக் கையி லெடுத்துக் கொண்டு வெளிச் செல்லும் சுரங்கப் பாதையை அணுகினவன், அப்படியே ஒரு நிமிஷம் கல்லாய்ச் சமைந்து நின்று விட்டேன். அங்கே இருந்த பார்சல் பெட்டியொன்றின் மேல் நின்று கொண்டிருந்த முதிய உருவம் என் நெஞ்சில் வியப்பையும் மகிழ்ச்சியையும் நிறைத்து விட்டது. அவர்—?

நான் யாரை மனித தெய்வமாக மதித்து அடிக்கடி இன்றுவரையில் நினைந்து வருகிறேனோ, அவரே தஞ்சாவூர் ஹைஸ்கூலில் படித்துக் கொண்டிருந்தபோது, — படிப்பில் முழு மூடமாக இருந்த என்னை அரும்பாடாகத் திருத்தி அறிவாளனாக்கி, ஊருக்கே முதல் மாணவனாகப் பரீட்சையில் தேர்ச்சி பெறவும் வைத்த என் ஆசிரியப் பெருந்தகை அவர்! இந்தத் தூய பழத்தை இன்றைய சந்தர்ப்பத்தில் கண்டு வணங்கும் பாக்கியம் கிடைத்திருக்கிறதே. இதை நழுவ விட முடியுமா?

கைகூப்பியபடி நெருங்கிப் போய் நின்று ''ஸார்... ஸார்! வணக்கம். என்னைத் தெரிகிறதுங்களா?'' என்றேன்.

எங்கேயோ பார்வையாக இருந்த அவர், என்னைக் கண்டதும் மலர்ச்சியான முகத்துடன், ''அடேடே! வாப்பா, வா! கலியாண மாப்பிள்ளை!'' என உரத்துக் கூறிக் கொண்டே தம் கையிலிருந்த சிறிய டிரங்குப் பெட்டியைக் கீழே வைத்தார். அப்போது எனது கண்கள் கண்ட காட்சியால் வியப்பின் எல்லையைக் கடந்து விட்டேன்! அந்தப் பெட்டி—நீல நிறப் பெட்டி—அவளுடையது!

இரண்டு கைகளாலும் என்னிரு தோள்களையும் அவர் தட்டினார். அதே பொழுதிலே என் பின்னாலிருந்து வந்த குரல் முழக்கிற்று!

''தாத்தா! அவரை நெடுகிலும் தேடி விட்டேன்! எங்கே போனாரோ?''

குரலைக் கேட்டுச் சட்டெனத் திரும்பினேன். அந்தக் குரல் — அவளேதான்! என்னைக் கண்டதும் அப்படியே பெரிய அதிர்ச்சியுற்றவளாக வாய் பொத்தி நின்



அவருக்கு நானென்ன மட்டமா?

''டாக்டர்! என்ன செய்வீங்களோ எனக்குத் தெரியாது. என் கணவருக்கு மட்டும் ஹை பிரஷர். எனக்கு லோ பிரஷரா? நான் என்ன மட்டமாப் போயிட்டேனு? எனக்கும் ஹை பிரஷர் தான் வேணும்!''

றாளே, இதை விடவா உலகத்தில் ஓர் அதிசயக் காட்சி இருக்க முடியும்?

புதிய பச்சை வர்ணக் கதர் முழுக் கைச் சட்டையும், கதர்க் கைலியும் தலைத் தொப்பியுமாக நான் கொண்டிருந்த முஸ்லிம் தோற்றம் அவளை அப்படியே உலுப்பி விட்டது! சிலையைப் போலவே நின்றாள்.

''நிர்மலா! இவன் யார் தெரியுமா? என்னால் மறக்க முடியாத என் ஸ்டுடெண்ட்—முகம்மது ரஹீம்!'' என்று கூறிவிட்டு, என்னைத் தட்டியபடியே, ''ஏய், புது மாப்பிள்ளை, இன்னிக்கு ராத்திரிதானே உனக்கு 'நிக்காஹ்'? நேற்றைக்கு—உன் பத்திரிகையும் வந்தது; உங்கள் ரிஸப்ஷனுக்கு வர முடியாத நிலைமை. என் பெரிய பேத்திக்கும் நாளைக்குக் கலியாணம்?'' என்றார்.

அதிகம் கூறுவானேன்? 'அவளை'யும் தன்னுடைய சின்னப் பேத்தி நிர்மலாவென எனக்கு அறிமுகப்படுத்தி, வாழ்த்துக்களையும் பொழிந்தார். நான் மிகுந்த பரபரப்புடன் என் கைப் பையைத் திறந்து அதிலிருந்த கமலாப் பழங்கள் யாவற்றையும் எடுத்து அவருடைய கரங்களில் வைத்து வணங்கி விடைபெற்றுக் கொண்டேன்.

அவளுக்கு 'நிர்மலா' என்று பெயர்? ஆகா எவ்வளவு பொருத்தமான பெயர்!

என்னையே இமையாமல் பார்த்தபடி வந்து கொண்டிருந்த அவளை நோக்கி, ''நிர்மலா! உங்களுக்குப் பாதுகாப்பான அண்ணன் நான் ஒருவன் சென்னையில் இருந்து வருவதை எங்கள் மாஸ்டரிடம் மறக்காமல் கூறி விடுங்கள்!'' என்றேன்.

அவள் சிரித்துத் தலையை ஆட்டியபடியே கைகுவித்தாளே, அப்போது அவளது முகம் நிர்மலமாக இருந்ததைக் கண்டு உள்ளப் பூரிப்புடன் திரும்பினேன். இப்போது ஒழுங்கான பாதைக்கு வந்துவிட்ட ரயில் அவள்!

என்னைப் பற்றி எந்த உண்மைகளை அவளிடம் சொல்லாமல் மறைத்து வந்தேனோ, அவை இப்படி அம்பலமாகிவிடுமென்று நினைத்தேனா? எனக்கெனவே பிறந்து வளர்ந்து, இன்றிரவு 'நிக்காஹ்' மூலம் நான் கைப் பற்றப் போகும் வரையில் காத்திருக்கின்ற அழகி கதீஜா பேகத்திற்கும் நானொரு தூய கணவனாக இருக்க வேண்டாமா? இந்த ஒரு பெருமை எனக்குப் போதும்!



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதராஸ் சிட்பண்டு 1961 ஆக்ட்படி கீழ்க்காணும் சிட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 of 1961)

25 மாதங்கள் — குறுகிய காலச் சிட்டுகள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200 | ரூ. 5000 | D | ரூ. 25 | ரூ. 625 |
| B | ரூ. 100 | ரூ. 2500 | E | ரூ. 20 | ரூ. 500 |
| C | ரூ. 50 | ரூ. 1250 | F | ரூ. 15 | ரூ. 375 |

40 மாதங்கள் — நீண்ட காலச் சிட்டுகள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500 | ரூ. 20000 |
| LTB | ரூ. 250 | ரூ. 10000 |
| LTC | ரூ. 125 | ரூ. 5000 |

சேரும் குரூப்பை விவரித்து எங்கள் விற்களுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி — பம்பாய் — பெங்களூர் — கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

VSK - BBC - 1000 TM - K

---

பண்டிட்
டி. கோபாலாசார்லுவின்

**ஜீவாம்ருதகம்**
ஆரோக்யத்திற்கும், பலத்திற்கும்

**அருணா**
மாதர்களின் ஆரோக்யத்திற்கு

**பாலப்ராஸ**
குழந்தைகள் டானிக்

**ரக்தசோதகா**
சிறந்த ரத்தசுத்தி ஔஷதம்

**ச்யவனப்ராசனம்**
இருமலுக்கு

**ஆயுர்வேதாஸ்ரமம்**
பிரைவேட் லிமிடெட்

---

# மூல நோயை

முற்றவிடாமல்
நம்பிக்கையான
**ஹெடன்ஸா**
உபயோகித்து
நிவாரணம்
அடையுங்கள்;
— ரண
சிகிச்சையையும்
தடுங்கள்




இந்த வெளிநாட்டுக்காரர்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு நாம் எதைச் செய்தாலும் ஆச்சரியமாக இருக்கிறது. ஆற்றங்கரையில் 'குரூப்'பாகக் குளிப்பது, அரச மரத்தைச் சுற்றுவது, வெற்றிலை பாக்குப் போட்டுக் கொள்வது, வெறும் வாயை மெல்லுவது, பெரியவர்களாகப் பார்த்து நிச்சயம் செய்த பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு குடும்பம் நடத்துவது, இளநீர் குடிப்பது — இவற்றையெல்லாம் வேண்டுமானால் பார்த்துப் பேஷாக ஆச்சரியப்படட்டும்; வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் இந்த 'இந்தியக் கயிறு' வித்தையில் (ரோப்—டிரிக்) கயிற்றின் மேலே ஏறிய மந்திரவாதி கடைசியில் காணாமற் போவதைப் பார்த்து ஆச்சரியப் பட்டு மூக்கின் மேல் விரலை வைக்கிறார்களே, அதுதான் எனக்குப் பெரிய வேடிக்கையாகப் படுகிறது. இது என்ன ஐயா பிரமாத வித்தை! ஒரு மனி-



தன் அல்லது ஒரு பொருள் எல்லாருடைய கண் எதிரிலும் காணாமற் போவது அப்படி என்ன பெரிய அதிசயம் என்கிறேன்! இதை விடப் பெரிய பெரிய அதிசயங்கள் நம் நாட்டில் நடக்கின்றனவே! சொல்லட்டுமா?

1. எழும்பூர் அல்லது மாம்பலம் ரயில் நிலையத்தில் காலை ஒன்பது மணிக்கோ அல்லது மாலை ஐந்து மணிக்கோ மின்சார வண்டி ஒன்றைப் பிடித்து, பரங்கிமலை வரையில் பிரயாணம் செய்யுங்கள். பரங்கிமலை ஸ்டேஷனில் இறங்கியவுடன் சட்டைப் பையைத் தொட்டுப் பாருங்கள். பர்ஸ் காணாமல் போயிருக்கும். இது உறுதி! வண்டியில் அத்தனை பேர் இருந்தும் உங்கள் பர்ஸ் எப்படியோ மறைந்து போனது அதிசயந்தானே?

2. தீபாவளி மலரையோ அல்லது நிறைய வண்ணப் படங்கள் கொண்ட ஆண்டு மலரையோ நண்பர்கள் யாருக்காவது இரவல் கொடுத்துப் பாருங்கள். புத்தகம் திரும்பி வரும் போது அதிலுள்ள சுவாமி படங்களோ அல்லது சினிமா நட்சத்திரங்களின் படங்களோ மாயமாய் மறைந்து போயிருக்கும்.

3. மவுண்ட்ரோட் தபால் நிலையத்தில் மும்முரமாகக் கடிதம் ஒன்று எழுதிக் கொண்டிருக்கிறீர்கள். உங்களிடம் வந்து, ''சார், ஒரு நிமிஷம்... பேனா தர்றீங்களா?'' என்று கேட்கிறார் ஒருவர். கொடுத்துவிட்டு, அதுவரை நீங்கள் எழுதியதை ஒரு முறை படித்துப் பார்க்கிறீர்கள். நீங்கள் தலை நிமிர்கிறபோது, பேனாவை இரவல் வாங்கிக் கொண்டவரையும் காணோம்; பேனாவையும் காணோம். இது ஓர் அதிசயமில்லாமல் வேறு என்னவாம்?

4. கல்யாண வீட்டுக்குப் போகிறீர்கள். வாசலில் புதுச் செருப்பைக் கழற்றி



வைத்துவிட்டு உள்ளே நுழைகிறீர்கள். மாப்பிள்ளையுடன் பேசி விட்டுக் கல்யாணச் சாப்பாட்டையும் ஒரு பிடி பிடித்துவிட்டு, தேங்காய்ப் பையும் கையுமாக வாசலுக்கு வந்து பாருங்கள். ஆகா! என்ன அதிசயம்! உங்கள் புதுச் செருப்பு காணாமற் போன மர்மம் என்ன?

5. உங்கள் லாண்டிரிக்காரர் நல்லவர்தான், நேர்மையானவர்தான். ஆனால் அவருக்கும் இந்த வித்தை தெரியும்! புத்தம் புதிய கைக்குட்டைகள் நான்கை அடுத்த சலவையின்போது அவரிடம் போட்டுப் பாருங்கள். மற்ற துணிகளெல்லாம் அப்படியே(அதாவது அழுக்குப் போகாமலேயே) திரும்பி வரும் போது இந்தக் கைக்குட்டைகள் மட்டும் காணாமற்போயிருக்கும், சுவாமி!



6. பிரமுகர்கள் சிலருக்கும் இந்த மந்திரம் தெரியும். நிதி ஏதேனும் திரட்டுவதற்காகப் போய்ப் பழக்கம் உண்டா உங்களுக்கு? அப்போது புரிந்துகொள்வீர்கள். வீட்டிலும் சரி, ஆபீஸிலும் சரி, நீங்கள் எந்த வேளை போய்ப் பார்த்தாலும் அவர் அந்தர்த்தியானமாகி யிருப்பார்.

கொடியிலே காயப்போட்டிருக்கும் துணிகள், மரத்திலே காய்த்துத் தொங்கும் மாங்காய், பூட்டாமல் வைக்கப்பட்ட சைக்கிள்—இவை போன்ற அற்பப் பொருள்களிலிருந்து வருமான வரி இலாகாவில் இருக்க வேண்டிய பெரிய பெரிய கம்பெனிகளின் வியாபாரம் சம்பந்தப் பட்ட ஃபைல்கள், அமெரிக்காவிலிருந்து, 'இந்தியக் குழந்தை'களின் அகோரப் பசியைப் போக்குவதற்காக வந்து இறங்கும் கோதுமை—மைலோ மூட்டைகள் வரைப் பல பொருள்கள் சட் சட்டென்று காணாமற் போகையில், கயிற்றின் மீது ஏறிய மந்திரவாதி காணாமற் போவது—என்ன பிரமாதம் ஐயா!

சென்னை: சாந்தி (டிலக்ஸ்-ஏர் கண்டிஷண்டு) ராக்ஸி & ஸ்ரீ முருகன்
மற்றும் தென்னாடெங்கும் இப்பொழுது நடைபெறுகிறது

தனபாக்கியம் பிக்சர்ஸ்

# அத்தை மகள்

மேற்பார்வை
**ராமண்ணா**

டைரக்ஷன்
**I.N.மூர்த்தி**

தயாரிப்பு
**A.ரத்னம்**



SEMBI

S.Lakshmi

# நீரு நீதான் வேண்டும்!









மகேசுவரி

"தபால் யாரிடமிருந்து...?" என்று வினவியபடியே வந்த வசந்தா கணவனின் எதிரிலிருந்த மேஜையின் மீது தாவி அமர்ந்து கொண்டாள்.

"அப்பாதான் எழுதியிருக்கிறார். கோபுவுக்குத் திருமணம் நிச்சயமாகியிருக்கிறதாம். அடுத்த மாதம் ஏழாந் தேதி முகூர்த்தமாம். உனக்கு எப்போது வரச் சௌகர்யம் என்று கேட்டிருக்கிறார். இந்தா, நீயே படித்துப் பார்" என்று கூறிக் கடிதத்தை மனைவியிடம் கொடுத்தான் சுந்தர்.

நொடியில் கடிதத்தைப் படித்து முடித்து விட்டாள் வசந்தா. அவள் முகம் அதே வேகத்தில் சிவக்கவும் செய்தது.

"சுமங்கலிப் பிரார்த்தனை, சமாராதனைக்கெல்லாம் வந்துவிடும்படி எழுதவில்லை, பார்த்தீர்களா?"

"நீ சொன்ன பிறகுதான் தெரிகிறது."

"அரவிந்தனின் கல்யாணத்துக்கு எழுதியிருந்தார்கள்."

"ஆமாம்."

"இப்போது எழுதவில்லை. எதனால் என்று உங்களுக்குப் புரிகிறதா?"

"அப்போதைய அவர்களுடைய அழைப்பை நீ அலட்சியப்படுத்தியதால் இருக்குமோ..?" சமயம் கிடைத்ததே என்று ஊசியை மெல்ல ஏற்றினான் சுந்தர்.

"அதுதான் இல்லை. அப்போது என்னை விட்டால் இன்னொரு மருமகள் கிடையாது. இப்போது இன்னொருத்தி வந்து விட்டாள். அதுவும் எப்படி? ஏவலுக்கு அடிபணியும் ஏமாளிப் பெண்ணாய். அதனால் ஏற்பட்ட அகம்பாவம்தான் இந்தத் தடவை அவர்களை எனக்கு வரச் சொல்லி எழுத விடாமல் தடுத்து விட்டிருக்கிறது."

"ஓகோ!" என்று அலட்சியமாகத் தலையை ஆட்டினான் அவன்.

"ஆமாம், நீங்க என்ன பதில் எழுதப் போகிறீர்கள்?"

"நான் எழுதுவதா? நீ என்ன சொல்லப் போகிறாய் என்று சொன்னால்தானே.... நான்...."

"ஆயிரம்தான் நான் அவர்களுக்குப் பிடிக்காதவளாக இருந்தாலும் எனக்கு அந்த வீட்டிலுள்ள உரிமையை நான் யாருக்கும் விட்டுக் கொடுத்து விடப் போவதில்லை. மூத்தவள் மூத்தவள்தான். இளையவள் இளையவள்தான் என்பதை நிரூபித்துக் காட்டவே போகிறேன். உங்கள் அப்பாவுக்கு எழுதி விடுங்கள்...."

"லீவு!"

"ஒரு மாதம் போட்டு விடுங்கள்" என்றவாறே தொப்பென்று கீழே குதித்து உள்ளே சென்றாள் வசந்தா.

ஊருக்குப் போய் எப்படியெல்லாம் நடந்து கொள்வாளோ என்கிற அச்சத்தினால் உள்ளூற வருந்தியவாறே தன் தகப்பனாருக்குப் பதில் எழுதத் தொடங்கினான் சுந்தர்.

ஐந்தாறு பிள்ளைகளும் பெண்ணும் உள்ள பெரிய குடும்பத்தின் தலைமகன் சுந்தர். பெற்றோர்களின் முதல் பூரிப்புக்கு உரியவனும்கூட. அவனுக்கு உரிய வயது வந்ததும் பெண்களின் ஜாதகங்களும் வந்து குவியத் தொடங்கின.

அம்மாவும் அப்பாவும் அடக்கமான பெண்ணையே தேடினார்கள். அவனோ அழகான பெண்ணையே தேடினான். அவர்கள் பண்புள்ள குடும்பத்தை விரும்பினார்கள். அவனோ பட்டதாரிப் பெண்ணையே விரும்பினான். இந்த நான்கு அம்சங்களும் ஒன்றாக அமைந்த பெண் கிடைப்பது அரிதாக இருந்ததால் காலம் வியர்த்தமாக நீண்டு கொண்டே போயிற்று. கடைசியில் பெற்றவர்கள் விட்டுக் கொடுக்க வேண்டியதாயிற்று. அழகான ஒரு பட்டதாரிப் பெண் கிடைத்தாள் சுந்தருக்கு. அவன் மனம் பூரித்தான். சுந்தர் — வசந்தா திருமணம் இனிதாக நடந்தேறியது.

சுந்தர் தன் பெற்றோர்களை விடுத்து வெளியூரில் ஹாஸ்டலில் தங்கி யிருந்து படித்தவன். படிப்பு முடிந்தபிறகும் வெளி நாட்டினரால் நிர்வகிக்கப்படுகிற கம்பெனியில் வேலை பார்ப்பவன். அவனுடைய பழக்க வழக்கங்கள் ஓர் இந்துக் குடும்பத்தின்—அதுவும் பெரிய குடும்பத்தின் பழக்க வழக்கங்கள்—சட்டதிட்டங்கள் பற்றி எதுவுமே தெரியாமல் போய் விட்டிருந்தது.

அதனால்தானோ என்னவோ வசந்தா ஒரு தடவை சொல்வதற்குள்ளேயே நிஜமிக்குத் தன்னை மாற்றியும் கொண்டு விட்டாள். புதுமணம் புரிந்தவர்களுக்கே உரிய ஆனந்த வானில் சிறகடித்துப் பறந்து உல்லாசமாகத் திரிந்து கொண்டிருந்தார்கள், சுந்தரும் — வசந்தாவும். இரண்டாண்டுகள் சென்றதே தெரியவில்லை அவர்களுக்கு.

திடீரென்று ஒரு நாள் சுந்தருக்கு அவனுடைய தகப்பனாரிடமிருந்து கடிதம் வந்தது. 'அரவிந்தனுக்குத் திருமணம் நிச்சயமாகியிருக்கிறது. சுமங்கலிப் பிரார்த்தனை—சமாராதனை எல்லாம் செய்ய வேண்டும். ஆதலால் சௌ. வசந்தாவை அழைத்துக் கொண்டு உடனே புறப்பட்டு வரவும்' என்று எழுதியிருந்தது.

"என்றைக்குக் கிளம்பலாம் ?" என்று கேட்டான் சுந்தர் மனைவியிடம்.

"கலியாணத்துக்கு முதல் நாள் போய்ச் சேர்ந்தால் போதும். மற்ற விஷயங்களை யெல்லாம் அவர்களே செய்து கொள்ளட்டும். நான் ஒன்றும் பெரிய பாட்டியம்மா இல்லை, கலியாணக் காரியங்களைச் செய்வதற்கு" என்று சொல்லி விட்டாள் வசந்தா.

மனைவி செய்வது சரியா தவறா என்று சுந்தருக்கும் தெரியவில்லை. அது பற்றி அவன் யோசிக்கவுமில்லை. இருவரும் கல்யாணத்துக்கு முதல் நாள்தான் போய்ச் சேர்ந்தார்கள்.

அங்கு வந்த பிறகுதான் சுந்தருக்கு, முன்னதாகவே வராமல் இருந்தது பெரிய தவறு என்று தெரிய வந்தது. உறவினர்கள் அனைவரும் ஆண் பெண் பேதமில்லாமல் 'சுமங்கலிப் பிரார்த்தனைக்கு வராமல் இருப்பாளோ, உனக்கு லீவு கிடைக்கவில்லை என்றால் அவளை மட்டுமாவது அனுப்பி வைக்கக் கூடாதோ ! தெய்வ காரியமில்லையா? மூத்த மருமகளாச்சே!' என்று கேள்வி மேல் கேள்வி போட்டு அவனைத் துளைத்து எடுத்த போது தான் அவன் தன் செயலின் தன்மையை உணர்ந்தான். அப்போதெல்லாம் தன் தாயார் மனத்துக்குள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்ததையும் கண்டு மனம் தவித்தான். என்ன இருந்தாலும் ரத்த பாசம் இல்லையா? மூத்த மருமகள் என்கிற முறையில் வசந்தா முன்னதாகவே வந்திருந்து செய்ய வேண்டியவைகளைச் செய்யாதிருந்தும் கூடத் தன் பெற்றோர்கள் வசந்தாவுக்குச் செய்ய வேண்டியவைகளைக் கிரமப்படி ஒரு குறைவும் வைக்காமல் செய்திருந்ததைக் கண்டு உள்ளூற வெட்கி நின்றான்.

அரவிந்தன்—நிருபமா கலியாணம் முடிந்து தம் ஊருக்குத் திரும்பியபிறகும் எந்த ஒரு காரியத்திலும் வசந்தா பொறுப்பேற்றுக் கொள்ளாமல் ஒதுங்கியே யிருந்தாள். இதனாலெல்லாம் சுந்தரின் பெற்றோர்கள் ரொம்பவும் மனம் வருந்தினார்கள். மணமாகி இரண்டே தினங்களாகியிருந்தும்கூட நிருபமா பல காலமாக அந்த வீட்டிலேயே வாழ்பவளைப் போல் பொறுப்புணர்ச்சியுடன் எல்லோரிடத்திலும் சுமுகமாக நடந்து கொண்டதைக் கண்டு மற்றவர்களைப் போல் சுந்தரும் வியப்படைந்தான். அதே சமயம் தம் மனைவியும் இப்படி எல்லோருடைய நல் மதிப்புக்கும் உகந்தவளாக நடந்து கொள்ள வில்லையே என்று மனத்துக்குள் ஏங்கினான்.

பத்து நாட்கள் இருப்பதற்குள் பலருடைய பலத்த வெறுப்புக்களை யெல்லாம் சம்பாதித்துக் கொண்டு ஊரை விட்டே கிளம்பினாள் வசந்தா.

அப்படிப்பட்ட வசந்தா இப்போது ஒரு மாதம் அங்கு தங்க நேர்ந்தால் என்ன என்ன நடக்குமோ என்று சுந்தர் கவலைப் பட்டான்.

"நிருபமா! நான் புடவைக் கடை வரைக்கும் போய் வருகிறேன். சமையற்காரர்கள் ஏதேனும் கேட்டால் எடுத்துக் கொடு. பூக்காரன் வருவான். வேண்டியதை வாங்கி வை. இந்தா, சாவிக் கொத்து" என்று கூறி, அதை எடுத்து மருமகளிடம் கொடுத்து விட்டுச் சென்றாள் நாகலக்ஷ்மி.

அவள் போவதையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்த வசந்தா பக்கத்து அறையிலிருந்த தன் கணவன் அருகில் வந்தாள்.

"காதில் விழுந்ததா ? மூத்தவள் நான் குத்துக்கல் மாதிரி எதிரில் நின்று கொண்டிருக்கிறேன். என்னிடம் கொடுக்காமல் சாவிக் கொத்தை நேற்று வந்த ஒருத்தியிடம் கொடுத்து விட்டுப் போகிறார் உங்கம்மா. இது சரியென்று உங்களுக்குப் படுகிறதா?" என்று படபடத்தாள்.

"இங்கேயே இருக்கிறவளுக்குத்தானே வசந்தா எந்தெந்த சாமான்கள் எங்கெங்கே இருக்கிறது என்று தெரியும் ? அதனால்

# துரிதமாக. ஜாக்கிரதையாக. நிச்சயமாக.

## எப்படி?

இப்போது இடையில் நிற்காமபடி ஒரு நகரத்திலிருந்து மற்றொரு நகரத்திற்கு நேராக எங்கள் லாரிகளைச் செலுத்துகிறோம். இந்த துரித சர்வீஸை எங்கள் வாடிக்கையாளர்கள் பெரிதும் வரவேற்கின்றனர். ஏனெனில் இந்தமுறையில் பார்சல்களை மேலும் துரிதமாக, ஜாக்கிரதையாக கொண்டு சேர்க்க முடிகிறது. இது போன்ற துரித சர்வீஸ்களை நாங்கள் மேலும் விரிவுபடுத்தி பல நகரங்களை நேரிடையாக இணைத்து வருகிறோம்.
இந்த சர்வீஸை வியாபாரிகள் சமூகம் மிக மிக வரவேற்கிறது. ஏனெனில் வியாபாரத்திற்கான சாமான்கள் ஜாக்கிரதையாக தடங்கலின்றி அடைவதால் அவர்கள் தேவையான அளவே ஸ்டாக் செய்கின்றனர். இதனால் அவர்கள் மூலதனத்தை அனாவசியமாக முடக்கத் தேவையில்லை.

**இந்த சிறப்பான பணி ஸதர்ன் ரோட்வேஸினால் எப்படி முடிகிறதென்றால்:**

- தனியார் துறையில் ஸதர்ன் ரோட்வேஸ் நிறுவனமே மிகவும் பெரிய ஸ்தாபனம்.
- அவர்கள் தங்களுக்குச் சொந்தமான லாரிகளையே இயக்குகிறார்கள்.
- அவர்களின் பயிற்சி பெற்ற ஊழியர்கள், லாரி ஸ்தாபனத்தின் ஒவ்வொரு இயக்கத்தையும் தனித்தனியே கண்காணிக்கின்றனர்.
- இவர்களின் டிரைவர்கள், உடலியலும், உளவியலும் பொருந்து நடத்தும் பரிசோதனைகள், மற்றும் தூரத்தைப்பற்றி மதிப்பிடும் பரிசோதனைகள், கண் கால்களிடை சுசிர ஒத்துழைப்புக்கான பரிசோதனைகள் ஆகியவற்றிற்கு உள்ளாகிய பிறகுதான் தேர்ந்தெடுக்கப் படுகிறார்கள்.
- 100 மைல்கட்கு ஒன்றாகிய டிப்போ, மற்றும் பராமரிப்புக்கான வசதி கொண்ட தொழில் பட்டறைகள் அமைத்திருக்கிறார்கள்.

இக்காரணங்களால் தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், மைசூர், கேரளம் முதலிய மாநிலங்களின் மக்களிடை ஸதர்ன்ரோட்வேஸ் பெருநம்பிக்கை பெற்றிருக்கிறது.

ஓரிடத்திலிருந்து
மற்றொரு இடத்திற்கு
நேரிடை
பார்சல் சர்வீஸ்

உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்

TVS

ஸதர்ன் ரோட்வேஸ்
பிரைவேட் லிமிடெட்
(இது ஒரு டிவிஎஸ்
ஸ்தாபனம்)
மதுரை

அம்மா அப்படிக் கொடுத்திருக்கலாம். இதற்கெல்லாமா வருத்தப்படுவது ?'' என்றுன் சுந்தர் மனைவிக்குச் சமாதானமாக.

'' அம்மாவுக்குப் பரிந்து கொண்டு வருகிறீர்களாக்கும் ?''

'' சேச்சே ! அது தப்பாச்சே !''

''இன்றைக்குக் குபேரா தியேட்டரில் புதுப் படம் வந்திருக்காம். நாம் போக முடியுமா ?''

''ஏன் முடியாது? தாராளமாகப் போகலாம்.''

உற்சாகமாக அறையை விட்டு வெளியே வருகிறுள் வசந்தா.

''சின்ன மன்னி ! என் 'பாண்ட்டு'க்கு இஸ்திரி போட்டு வைக்கச் சொன்னேனே ! இன்றைக்கு எங்க பள்ளிக்கூடத்துக்கு இன்ஸ்பெக்டர் வருகிறுர் மன்னி!''

'' ஓ ! இஸ்திரி போட்டுச் சின்ன மேஜையின் மேலே வைத்திருக்கிறேன், சேகர்.''

''நன்றி, மன்னி!''

'' சின்ன மன்னி ! கொஞ்சம் தலையை வாரிப் பின்னி விடுகிறீர்களா ? எனக்குப் பள்ளிக்கூடத்துக்கு நேரமாச்சு...''

'' இதோ, சீப்பும் எண்ணெயும் எடுத்து வந்து விட்டேன். ரிப்பனை மட்டும் எடுத்துக் கொண்டு வா, சுகந்தி.''

'' சின்ன மன்னி !''

''என்ன, ராஜு !''

'' இந்தப் பட்டியல் கணக்கு எனக்குத் தெரியலே, மன்னி!''

'' சுகந்திக்குப் பின்னிக் கொண்டே சொல்லித் தருகிறேன். எங்கே கணக்கைப் படி., பார்க்கலாம்.''

சுகந்திக்குத் தலை பின்னி ஆயிற்று. ராஜுவுக்கும் கணக்குச் சொல்லிக் கொடுத்தாயிற்று.

'' சின்னம்மா ! அதிகப்படியாக எத்தனை பால் வேண்டும் ?''

'' இரண்டு படி போதும். இதோ இந்தப் பாத்திரத்தில் விடு. ஒழுங்காக அளந்து போடு.'' பாலை எடுத்துக் கொண்டு உள்ளே போகிறுள் நிருபமா.

''சின்னம்மா! கதம்பம் எத்தனை முழம் ? மல்லிகை எத்தனை முழம் வேண்டும் ?''

''இதோ வருகிறேன் இரு. கையை நீட்டி அளந்து கொடு. குறைத்து அளக்காதே! கதம்பம் ஆறு முழம் கொடு. மல்லிகை பத்து முழம் கொடு. சாயங்காலம் மறக்காமல் கனகாம்பரம் கொண்டு வா. புதுப் பெண்ணுக்கு வேண்டும்.''

''சரிங்க....''

''நிருபமா....!''

''வந்து விட்டேன்.''

''சந்தனம் அரைத்துத் தருகிறுயா ?'' என்று மாமஞரிடமிருந்து நிதானமான உதவி கோரப்படுகிறது.

''அரைத்துச் சாம்பிராணி டப்பாவுக்குப் பக்கத்தில் வைத்திருக்கிறேன். கொஞ்சம் நகர்ந்து கொள்கிறீர்களா? நான் எடுத்துத் தருகிறேன்.'' பணிவன்போடு மாமஞரின் எதிரில் வந்து நிற்கிறுள் நிருபமா.

'' வேண்டாமம்மா ! நானே எடுத்துக் கொள்கிறேன். நீ போய் வேலையைக் கவனி. கண் தெரியவில்லை..... ம்.....''

## நாயே நீ வாழ்க!



நேப்பாளத்தில் ஒவ்வொரு வருடமும் ''நாய்களை வணங்கும் தினம்'' கொண்டாடப் படுகிறது. இவ் வருடம் (8—11—69 அன்று) மக்கள் நாய்களுக்குக் குங்குமம் இட்டும், மாலை அணிவித்தும், இனிப்புகள் வழங்கியும் வணங்கினர்! அங்கு இது பெரிய பண்டிகையாக, வெகு விமரிசையாகக் கொண்டாடப்படுகிறது. நாய் கடவுளாக மதிக்கப்படுகிறது. அன்று தெரு நாய்கூட ஒரு பிரமுகர்தான்!

— அப்போலோ (டெக்கான் ஹெரால்ட்)

---

''அம்மா!'' என்று சமையற்காரர் அழைக்கிறுர்.

''இரு....'' குளியல் அறையிலிருந்து அரவிந்தனின் குரல் கேட்கிறது.

'' வருகிறேன்.....'' வேட்டி துண்டுடன் ஓடுகிறுள் நிருபமா. வசந்தா தன் கணவனிடம் வருகிறுள்.

''நிருபமா எப்படிப் பம்பரமாகச் சுழல்கிறுள் பார்த்தாயா ?'' என்று கேட்டு எரிகிற தீயில் மேலும் கொஞ்சம் எண்ணெயை வார்க்கிறுன் சுந்தர்.

''சுற்றி விட்டால் நான் மட்டும் சுழல மாட்டேனுக்கும் ?'' என்று நிஷ்டூரமாகப் பதில் அளிக்கிறுள் வசந்தா.

'' இது வீண் பேச்சு வசந்தா. உன்னுல் அது முடியுமா ? சுயநலமில்லாதவர்களால் தான் மற்றவர்களுக்காக உழைக்க முடியும். உன் போன்றவர்களுக்கு...'' வார்த்தையை முடிக்கவில்லை சுந்தர். நடுவில் குறுக்கிட்டாள் வசந்தா.

''எல்லோரும் அவளிடம்தானே எதையும் கேட்கிறுர்கள் ? என்னிடம் சொன்னுல் நான் செய்ய மாட்டேனு ? வேண்டுமென்றே என்னை ஒதுக்கி வைக்கிறுர்கள்.''

'' எல்லோரும்தான் அப்படி என்றுல் கோபுவின் மனைவி லீலா புதியவள்தானே ! உனக்கும் நிருபமாவுக்கும் அவள் ஒன்றுதானே ? அவளுக்குச் சிங்காரித்துவிட உன்னுல் முடிந்ததா? அதையும் நிருபமாதானே செய்ய வேண்டியிருக்கிறது?'' என்று கேலியாகக் கேட்டான் சுந்தர்.

''வலியச் சென்று செய்கிறுள் நிருபமா. அது என்னுல் முடியாது. கேட்டுக் கொண்டால் செய்வேன்....''

''அப்படி ஒப்புக் கொள். நிருபமாவைப் போல் உன்னுல் எல்லோருக்கும் நல்லவ

ளாக —அனைவரையும் அரவணைத்துக்கொண்டு இணைந்து வாழ உன்னால் முடியவே முடியாது.''

''எனக்கே ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. எல்லோருக்கும் ஈடு கொடுக்க அவளால் எப்படி முடிகிறது?'' என்று உண்மையிலேயே மனம் விட்டுச் சொன்னாள் வசந்தா.

''உனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. எனக்கு அனுதாபமாகவும் இருக்கிறது. உள்ளே அவள் மாடாய் உழைக்கிறாள். வெளியே அரவிந்தன் மாடாய் உழைக்கிறான். அவனுடைய தம்பி தங்கைகள் எல்லாரும் எனக்கும் தம்பி தங்கைகள்தானே? அவர்களுடைய முன்னேற்றத்துக்காக — இந்தக் குடும்பம் ஒழுங்காக நடைபெறுவதற்காக அவன் எத்தனை சிரமப்படுகிறான்! ஆனால் அதே அளவுக்குக் கடமைப்பட்டுள்ள நானோ?'' சுந்தரின் குரல் கரகரக்கிறது.

''உங்களை யார் செய்ய வேண்டாம் என்று தடுத்தது?''

''ஆரம்பத்திலிருந்தே நான் இந்த வீட்டினின்றும் ஒதுங்கியே விருந்து ஒட்டுதலின்றி வாழ்ந்து விட்டேன். மணமான பிறகாவது மற்றவர்களுடன் இணைந்து வாழ்ந்திருக்கலாம். நீயோ தனிக்குடித்தனம் போடச் சொல்லி விட்டாய். அரவிந்தனும் நிருபமாவும் இந்தக் குடும்பத்துக்காக எவ்வளவு சிரமப்பட்டிருக்கிறார்கள், பாவம். அது இப்போது இங்கு நெருங்கி வந்து பார்க்கும் போதுதான் தெரிகிறது. அவர்கள்மீது பரிதாபமாகவும் இருக்கிறது. அவர்களுக்காக நான் இப்படி அனுதாபப்படுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?'' உணர்ச்சி மிகுதியால் சுந்தரின் குரல் தழுதழுத்தது.

''ஏன் செய்ய முடியாது? இந்த ஊருக்கே மாற்றிக்கொண்டு வந்து தம்பிக்கு உதவியாக இருப்பது.''

'' வசந்தா! உனக்குக்கூடவா இப்படிச் சொல்லத் தோன்றுகிறது? என்னால் நம்பவே முடியவில்லையே!''

'' இங்கே உங்கள் தம்பிக்கும் நிருபமாவுக்கும் இருக்கிற மதிப்பைப் பார்க்கும்போது இப்படி வீட்டுக்கு மூத்த மருமகளாக இருந்தும்கூட அதற்குரிய கௌரவம் துளியும் இல்லாமல் இருக்க வேண்டியிருப்பதை நினைத்தால் ரொம்பவும் வேதனையாக இருக்கிறது'' என்றாள் வசந்தா.

'' உன்னால் நிருபமாவைப் போல் வாழ முடியுமா?''

''பழகினால் தானே சரியாகி விடுகிறது.''

''ஒன்று செய்யலாமா?''

'' என்ன?''

''அரவிந்தனையும் நிருபமாவையும் கிராமத்திலுள்ள வீட்டில் போய் நிம்மதியாக இருக்கச் சொல்லி அனுப்பி விட்டு, நாம் இந்த வீட்டைக் கவனித்துக் கொள்வோமா?''

''செய்யலாம். நிருபமா இங்கு இல்லாவிட்டால் எல்லோரும் என்னிடம் நெருங்கி வருவார்கள் என்றே எனக்கும் தோன்றுகிறது. எப்படியாவது நிருபமா வாங்கிய பெயரை நானும் வாங்கிவிட வேண்டும்'' என்றாள் வசந்தாவும் துடிப்புடன்.

''சின்ன மன்னி! நீங்களும் சின்னண்ணாவும் கிராமத்துக்குப் போகப் போகிறீர்களாமே? என்னையும் அழைத்துக் கொண்டு போங்க மன்னி!'' நிருபமாவின் அருகில் வந்து நின்று கொண்டு கெஞ்சினாள் சுகந்தி.

''கட்டாயம்!'' என்று சொல்லிச் சுகந்தியின் கன்னத்தில் முத்தமிட்டாள் நிருபமா.

''ஏண்டி... நிருபமா! என்னால் உன்னை விட்டுப் பிரிந்து இருக்க முடியுமோடீ?'' என்று கண் கலங்க மருமகளின் அருகில் வந்து நின்றாள் நாகலக்ஷ்மி.

பரிவுடன் மாமியாரின் முகத்தைப் பார்த்தாள் நிருபமா. உறவால் மாமியாராக இருந்தும் உள்ளத்தால் தாயினும் சாலப் பரிந்தூட்டும் அப்பாவி மனம் படைத்த அந்த உத்தமியின் குழந்தை முகத்தை அவளால் மட்டும் மறந்து வாழ முடியுமா? பெற்றால்தான் பெண்ணா?

''முடியாதும்மா! உங்களால் என்னைப் பிரிந்து வாழ முடியுமோ முடியாதோ தெரியாது. என்னால் உங்களையெல்லாம் விட்டுப் பிரிந்து தனித்து வாழ ஒருநாளும் முடியாது. நான் கிராமத்து வீட்டுக்குப் போகப் போவதில்லை. இங்கேயேதான் இருக்கப் போகிறேன்......'' என்றாள் நிருபமா தழுதழுத்த குரலில்.

''எனக்கும் அப்படித்தானம்மா தோன்றுகிறது.'' என்று கூறியவாறே பின் கையைக் கட்டியவாறே அவ்விடம் வந்து நின்றான் அரவிந்தன்.

''அவளைப் பார்த்து இவள் மாறி விடுவாளோ என்று பயந்து கொண்டிருந்தேன். என்னடா என்றால் இவளைப் பார்த்து அவள் நல்லவளாகி விட்டாளே! நிருபமா! உன் குணம் அத்தனையும் தங்கமடியம்மா!'' என்ற நாகலக்ஷ்மி நிருபமாவின் கன்னத்தை வழித்துத் தன் நெற்றியில் சொடுக்கிக் கொண்டாள்.

'க்ளிக்' ஒளி பாய்ந்து மறைந்தது.

'இதென்ன துஷ்டத்தனம்?' என்பது போல் கணவனைப் பார்த்தாள் நிருபமா.

'' ஒவ்வொரு கடிதத்திலும் வரிக்கு வரி 'நீ' நல்ல பெயர் எடுக்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாக இருக்கிறது' என்றே உன் அம்மா உனக்கு எழுதிக் கொண்டிருக்கிறார் அல்லவா? அவர்களுக்கு ஒரு காப்பி அனுப்பலாம் என்றுதான் எடுத்தேன்'' என்று கூறி மந்தகாசமாகச் சிரித்தான் அரவிந்தன்.

அந்த எழிலார்ந்த சிரிப்பில் தன்னைப் பறி கொடுத்து நின்றாள் நிருபமா ஒரு கணம்.

நாகலக்ஷ்மி மெல்ல அவ்விடத்தை விட்டு நகர்ந்தாள்.

தன் கையிலிருந்த காமிராவை நிருபமாவின் கழுத்தில் மாலையாகப் போட்டு அவளைத் தன் அருகில் இழுத்துக் கொண்டான் அரவிந்தன். நாணித் தலை குனிந்தாள் அவள்.

''நிரு! நான் ரொம்ப அதிர்ஷ்டசாலியாக்கும்!'' என்றான் அவன், அவள் செவியருகே தன் இதழ் பதித்து.

''இல்லை. நான்தான்!'' என்றாள் அவள்.

பக்கத்து அறையிலிருந்து இரு விழிகள் பொறாமையோடு இவர்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்டன.

# வட்டமேஜை

அரசாங்க ஹோட்டலான "அசோகா"வில் "சுற்றும் டவர்" கட்டப் போவதாக அரசாங்கம் அறிவித்த போதே பல எதிர்ப்புக்கள் கிளம்பின. ஏழை நாடான நாம் பல லட்சங்கள் இதற்குச் செலவிடுவது வீண் என்று கூறியும் கேட்காமல் ஜப்பானிலிருந்தும் உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் இயந்திரங்கள் தருவித்தனர். இப்பொழுது 14.3 லட்சம் ரூபாய் அந்நியச் செலாவணியில் செலவு செய்தபின் "சுற்றும் டவர்" கட்டுவதை நிறுத்தி விட்டதாக அரசு அறிவித்திருக்கிறது! காரணம், காலம் கடந்த ஞானம்! செலவு கட்டுப்படி ஆகவில்லையாம். மதிப்பிட்டதைவிடப் பல மடங்கு அதிகம் செலவாகும் என்று அரசாங்கம் இப்போது புரிந்து கொண்டிருக்கிறது! சுற்றுவது 'டவர்' அல்ல; நம் தலைதான்!

பெங்களூர்
28–11–69 எஸ். நடராசன்

கடந்த 30–11–69 கல்கி வார இதழில் சிக்கி என்னும் ஜெர்மானியப் பெண் நிமிடத்துக்கு 716.6 சொற்கள் வீதம் 'டைப்' செய்வதாகக் குறிப்பிட்டிருந்தீர்கள். இது உண்மையில் நம்பத் தகுந்ததா என்று எங்களுக்கெல்லாம் ஒரே வியப்பு.

கோலார் தங்கவயல்,
2–12–69 எம். கன்னையன்

(இதே போன்ற சந்தேகம் எங்களுக்கும் ஏற்பட்டதால் குறிப்பிட்ட செய்தி ஸ்தாபனத்தில் விசாரித்தோம். சிக்கி என்னும் அந்தப் பெண்மணி துரிதமாக ஒருவர் பேசுவதைவிட வேகமாக டைப் செய்யக்கூடியவர் என அறிந்தோம். கல்கியில் வெளியான அந்த விவரம் சரியே. — ஆசிரியர்)

தமிழ் ஆட்சி மொழி என்ற வகையில், அரசு சம்பந்தப்பட்ட எல்லா அலுவலகங்களிலும் தமிழிலேயே பெயர்ப் பலகைகள் வைத்திருப்பது பாராட்டுக்கு உரியதுதான் என்றாலும், தமிழ் அல்லாத பிற மொழியினரும் அறிந்து கொள்ளும் வகையில் தமிழுக்குக் கீழே ஆங்கிலத்தையும் சேர்க்க வேண்டும். உதாரணமாக, "தமிழக அரசு தலைமைச் செயலகம்" என்ற பெயர்ப் பலகை நமக்கெல்லாம் மகிழ்ச்சியையே தருகிறது. ஆனால் அதற்குக் கீழே ஒரு வரி, "**Tamil Nadu Secretariat**" என்று இருந்தாலென்ன?

சென்னை – 3
13–11–69 பி. வி. கிரி

பொதுமக்களுக்காக ஹார்லிக்ஸ் விற்கப்படுகிறது. ஹார்லிக்ஸ் பற்றி விளம்பரம் செய்வதிலும் பஞ்சமில்லை. என்ன பயன்? தேவைப்படுவோருக்கு ஹார்லிக்ஸ் கிடைப்பதில்லை. அப்படிக் கிடைத்தாலும் அதிக விலை சொல்கிறார்கள். சில கடைகளில்

★ இக்குறிப்பிட்ட கடிதமும் ரூ. 15 பரிசு பெறுகிறது.

சரக்கை வைத்துக் கொண்டு ஆளைப் பார்த்துக் கொடுக்கிறார்கள்.

டாக்டர்கள் நோயாளிகளுக்குத் தெம்பு வர ஹார்லிக்ஸ் சாப்பிடுங்கள் என்று சொல்கிறார்கள். கிடைத்தால்தானே சாப்பிடுவதற்கு? பணக்காரர்கள் எவ்வளவு விலையாயிருந்தாலும் வாங்கி விடுகிறார்கள். ஏழைகள் என்ன செய்வது? தயவுசெய்து எல்லோருக்கும் நியாயமான விலையில் ஹார்லிக்ஸ் எங்கும் கிடைக்குமாறு செய்ய வேண்டுகிறோம்.

கடலூர்,
2–12–69 எம். விமலா

★ குடும்பக் கட்டுப்பாடு வார விழாவுக்காகப் பலலட்ச ரூபாயில் சிவப்பு முக்கோணப் போஸ்டர்களைப் பல பள்ளிக் காம்பவுண்டுச் சுவர்களிலும் நுழைவு வாயில்களிலும் ஒட்டி விட்டார்கள். மேலும், பொது இடங்களில் குடும்பக் கட்டுப்பாடு சம்பந்தமான செய்திப் படங்களை இரவில் போட்டு, சிவப்பு முக்கோணம், லூப், நிரோத் பற்றி விரிவான விளக்கம் கொடுக்கிறார்கள். அத்தகைய செய்திப் படங்களைப் பார்ப்பது, 75 சதவீதம் 15 வயதுக்குட்பட்ட சிறுவர்களும் சிறுமிகளுமே. இதனால் வருங்காலச் சந்ததிகள் மனத்தில் ஆபாசமும், அருவருப்பும் அடைவதுடன், பெற்றோர்களிடம் அவைகள் பற்றி விளக்கமும் கேட்கின்றனர். இனிமேலாவது பெரியவர்களை மட்டுமே அனுமதித்துப் பார்க்கும்படி ஏதாவது அலுவலகங்களிலாவது, கலைக் கூடத்திலாவது இத்தகைய செய்திப் படங்களைத் திரையிடட்டும்.

அம்பை,
3–12–69 ஜி. ரூக்கம்மாள்

மாநில அரசுகளால் நடத்தப்படும் லாட்டரிச் சீட்டுக்களை விற்பதற்காக அவ்வப்போது பத்திரிகைகளில் வெளியிடப்படும் விளம்பரங்களை நான் கூர்ந்து கவனித்து வருகிறேன். சமீபத்தில் வெளியான ஒரு விளம்பரத்தைக் கண்டு நான் மிகவும் வேதனைப்பட்டேன்.

"முயற்சி இல்லாமல் பணக்காரர் ஆக வேண்டுமா? மைசூர் மாநில அரசு பரிசுச் சீட்டுக்களை வாங்குங்கள்."

இந்திய மக்களில் பெரும்பாலோர் ஏற்கெனவே கடினமாக உழைக்காமல் சோம்பல் மிக்கவர்களாகத் திரிகிறார்கள். "இரண்டாவது உலகப் போரில் நாசமாக்கப்பட்ட ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகளிலெல்லாம், அந்நாட்டு மக்களின் இடைவிடாத கடின உழைப்பினால் இன்று தொழில் துறை மிக முன்னேறி விட்டது!" என்று உழைப்பின் உயர்வைப் பற்றிச் சொன்னாலும் அதைப் பற்றிக் கவலைப்படாமல் கடமையில் கருத்தில்லாமல் உரிமை பற்றியே நிறையப் பேசும் அநுதாபத்துக்குரிய இந்தியர்களை இத்தகைய ஆசை காட்டும் விளம்பரங்கள் மேலும் சோம்பேறிகளாக்கும் என்பதில் சந்தேகமே இல்லை!

காந்தி கிராமம்,
1–12–69 அ. இராமநாதன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




வசந்தம் ■ சந்தனம் ■ ரோஜா ■ மல்லிகை ■ கார்னேஷன்

லின்டாஸ்-HBT. 37-ம் TM        * இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு (*ரிஜிஸ்டர்டு டிரேட்மார்க்).